# படலஅட்டவணை.


| பக்கம் | படலம். | பக்கம். | படலம். |
|---|---|---|---|
| க | கடவுள்வாழ்த்து | ஙசஉ | சிக்கையர்திப்படலம் |
| உ | திருவரங்கப்படலம் | ஙசரு | கோவர்த்தனகிரிப்படலம். |
| உக | நைமிசாரணியப்படலம் | ஙரு௦ | வருணப்படலம் |
| ஙசா | ஆற்றுப்படலம் | ஙருகூ | குழலூதுபடலம் |
| ஙஅ | நாட்டுப்படலம் | ஙசா௦ | அம்பிகாவனப்படலம் |
| சக | நகரப்படலம் | ஙசாஉ | நப்பின்னைப்படலம் |
| சகூ | நாச்சியார் திருவவதாரப் படலம் | ஙசாசா | அரிட்டாசுரப்படலம் |
| சாங | கெசேந்திரன் மோட்சப்படலம் | ஙசாஅ | கேசிவதைப்படலம் |
| எங | வராகப்படலம் | ஙசாஅ | வியோமனப்படலம் |
| கூரு | கபிலப்படலம் | ஙஎ௦ | அக்குரூரப்படலம் |
| க௦எ | நாரசிங்கப்படலம் | ஙஎஅ | தாருகன்வதைப்படலம் |
| கஙரு | துருவப்படலம் | ஙஅஉ | சுதாமாப்படலம் |
| கஙகூ | மச்சப்படலம் | ஙஅஉ | திருவிக்கிரமப்படலம் |
| கசஉ | கூர்மப்படலம் | ஙஅச | சிலையிறுத்தப்படலம் |
| கருசா | அண்டப்படலம் | ஙஅரு | கஞ்சன்முயற்சிப்படலம் |
| கஎகூ | பிதுச்சக்ரவர்த்திப்படலம் | ஙஅஎ | குவலையாபீட மகாபத்திரன்வதைப்படலம் |
| கஅச | இடபராசப்படலம் | ஙஅகூ | சாணூரன்வதைப்படலம் |
| ககூச | வாமனப்படலம் | ஙகூஉ | கஞ்சன்வதைப்படலம் |
| உ௦உ | அசாமிளப்படலம் | ஙகூங | உக்கிரசேனன்முடிசூடுபடலம் |
| உ௦கூ | உருக்குமாங்கதப்படலம் | ஙகூச | குருதட்சணைப்படலம் |
| உசச | அம்பரீடப்படலம் | ஙகூரு | உத்தவப்படலம் |
| உசஅ | பரசுராமப்படலம் | ஙகூகூ | பாண்டவப்படலம் |
| உருங | இராகவப்படலம் | ச௦க | சராசந்தனபசயப்படலம். |
| உஎஎ | தேவகிப்படலம் | ச௦ரு | சிரகாலன்வதைப்படலம் |
| உஅஉ | கண்ணன் திருவவதாரப்படலம் | ச௦அ | காலயவன்வதைப்படலம் |
| ங௦ங | பூதனைவதைப்படலம் | சகஉ | இரேவதிப்படலம் |
| ங௦கூ | சகடாசுரப்படலம் | சகரு | படங்காண்படலம் |
| ஙக௦ | காலியாசுரப்படலம் | சஉ௦ | விதர்ப்பராசன் மந்திரப்படலம் |
| ஙகங | குக்குடாசுரன்வதைப்படலம் | சஉரு | தூதேவுபடலம் |
| ஙகரு | நவநீதப்படலம் | சசரு | அலங்கற்படலம் |
| ஙகஎ | ததிபாண்டப்படலம் | சருசா | சேதிபராசப்படலம் |
| ஙககூ | அருச்சுனப்படலம் | சசாச | நாச்சியார்தேரேறுபடலம். |
| ஙஉஉ | பெகாசுரன்வதைப்படலம் | சஎச | சேனைசூழ்படலம் |
| ஙஉச | அகாசுரன்வதைப்படலம் | சஅசா | பவுண்டரப்படலம் |
| ஙஉரு | வற்சாபகாரப்படலம் | சஅகூ | சாலுவப்படலம் |
| ஙஉஅ | தேனுகன்வதைப்படலம் | சகூஉ | தந்தவக்கிரப்படலம் |
| ஙங௦ | காளியமர்த்தனப்படலம் | சகூச | மகதராசப்படலம் |
| ஙஙச | பெலம்பன்வதைப்படலம் | சகூஎ | சிசுபாலப்படலம் |
| ஙஙஎ | கூறைகொள்படலம் | ரு௦க | உருக்குமன் அபசெயப்படலம் |
| | | ருகஅ | துவாரகாபுரிப்படலம் |

ஸ்ரீ

# பிரகடனம்.

| | | ரு. அ. |
|---|---|---|
| ஸ்ரீ மஹாபாகவத புராணம் முதற்புத்தகம். | தபாற்கூலியுட்பட | 2 - 4 - |
| காஞ்சிப்புராணம். | | 2 - 0 - 0 |
| திருக்கழுக்குன்றப்புராணம் உரையுடன். | | 0 - 12 - 0 |
| திருவிரிஞ்சைப்புராணம் உரையுடன். | | 0 - 8 - 0 |
| வள்ளலார்சாத்திரம். | | 1 - 4 - 0 |
| சுந்தரமூர்த்திசுவாமிகள்தேவாரம். | | 0 - 12 - 0 |
| தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையருரை. | | 0 - 12 - 0 |
| கொலைமறுத்தல் உரையுடன். | | 0 - 4 - 0 |
| திருமுருகாற்றுப்படை உரையுடன். | | 0 - 3 - 0 |
| கல்லாடமூலம் | | 0 - 2 - 0 |
| இலக்கணச் சுருக்கம் | To Middle School Examination. | 0 - 5 - 0 |
| கந்தரனுபூதிஅலங்காரம். | | 0 - 1 - 6 |
| சித்தாந்தக்கட்டளை. | | 0 - 1 - 6 |
| திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ். | | 0 - 1 - 6 |
| திருப்பேரையூர் பச்சைநாயகன் பந்தடி | | 0 - 1 - 0 |
| சச்சிதாநந்தமாலை. | | 0 - 1 - 0 |
| கந்தரந்தாதி மூலம். | | 0 - 1 - 0 |
| சிவஞானபோதம் உரையுடன். | | 1 - 0 - 0 |
| வடதிருமுல்லைவாயிலந்தாதி. | | 0 - 1 - [illegible] |
| இடும்பன்கவசம் கடம்பன்கவசம். | | 0 - 1 - [illegible] |

ஐந்துபுத்தக மேககாலத்தில்வாங்கினால் ஒரு புத்தகம் அதிக கொடுக்கப்படும்.

இவை சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை சுப்பிரமணியமுதலிவீதி - 33 - வது வீட்டில் புங்கத்தூர் கந்தசாமிமுதலியாரிடத்து தஞ்சாவூரில் புத்தகஷாப்பு த - நா - திருவேங்கடம்பிள்ளையிடத்து திருச்சினாப்பள்ளி புத்தகக்கடை நாராயணசாமி பிள்ளையிடத்தும் மதுரை புத்தகக்கடை முத்தையப்பிள்ளையிடத்தும் பெற்றுக்கொள்ளலாம்.







விஷ்ணுமயம்.

# ஸ்ரீமஹாபாகவதம்

## கடவுள்வாழ்த்து.

பொன்னிறமாமெனப்புவனம்படைத்துக்காத்துப்
புயனிறமாய்த்தழனிறமாய்த்துடைத்துப்போந்து
முந்நிறமாய்த்திளைத்துயர்ந்துமுழங்குநார
முடுகிடவேநீண்டவடவிலைமேன்முந்தித்
தொன்னிறமாமண்டாண்டமெண்ணில்கோடி
துலங்கிடவேவயிற்றமைத்துத்தூயதாய
தன்னிறமாங்குழவியெனப்பொலிந்துதோன்றுந்
தலைவனிருதாளிணையெந்தலைமேல்வைப்பாம். (௧)

வேறு. வானுசகன்பாவகனீர்நிலமற்றுமாகி
யூனுருடலாயுயிராயுயிர்தோறுமேவுங்
கோனாகிமூவர்செயலாயக்குணங்கள்யாவுந்
தானாகிநின்றதலைவன்றிருத்தாடுதிப்பாம். (௨)

வேறு. காமதனுற்கடல்கடைந்தமுதளித்துங்கனகனுர்
முரவுகிரால்வகிர்ந்தளைந்துமுலைகிடந்துண்டுமிழ்ந்தளந்துஞ்
சாமதனுற்றசமுகனொருபதுகமறத்தடிந்தும்
பாமபதத்தொளிகொளரிபதுமமலரடிபணிவாம். (௩)

வேறு. சுசரதவசரபங்கற்கருள்செய்துசுரர்கோனீந்த
வசரதமிசையினேறியிராவணன்மாளவேமிக்
கசரதவாளியேவிக்கமலனோடிமையோர்போற்றத்
தசரதனடியில்வீழ்ந்தசெம்மலுன்சென்னிவைப்பாம். (௪)

யாதவர்குலத்துட்டோன்றியிமையவர்க்கிடர்கள்செய்யும்
பாதகர்மடியவேபார்பாரமதொருவப்பார்த்தன்
றூதனமைச்சர்வேண்டிச்சூதனுய்த்தேருமூருஞ்
சீதரனைவாசுதேவனைவணக்கஞ்செய்வாம். (௫)

வேறு. தீயனவொழுபிறப்பினுஞ்செய்ததீவினைகண்
மாயகாரணனெட்டெழுத்தினைவழியொழுகச்
செயவாயரங்கேசனார்மகிழ்திருப்பணிசெய்
வாயனார்திருத்தாளிணைபோற்றுவமதிவால். (௬)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

# முதலாவது.— திருவரங்கப்படலம்.

வேறு. சீராருமிந்திரைமண்மகள்சேர்ந்துபோற்று
மோராயிரவாய்ப்பணிமீதுறைவானையுள்கி
நீராயுமனந்திருபாலுநிறைந்துசேர்ந்த
காரார்பொழில்சூழ்திருக்காவிரிவாழிவாழி. (௧)

வேறு. தரங்கவேலையடைத்துத்தனுவினுற்
றுரங்கதேர்கரிதுன்னிலங்காதிபன்
சிரங்கள்வீழவடுந்தெய்வவாளியா
ரரங்கவீசரடியிணைவாழியே. (௨)

வேறு. சூதாம்பரனார்செயலென்றுசனன்சொல்லவு
பீதாம்பரிசென்றுணர்மாவலியீந்துவப்பப்
பாதாம்புயம்பாருயர்வானிற்பரந்தவந்நாட்
பீதாம்பரமல்கியபேரொளிவாழிவாழி. (௩)

வேறு. நந்தன்மைந்தனெனக்கறைநாடிமீக்
குந்தியண்டருறித்தயிர்கொள்ளைகொள்
ளெந்தையெங்கணிரணியகெற்பன்வா
ழுந்தியின்கிளரொண்மலர்வாழியே. (௪)

எதிரிலங்கைமன்றோள்சிரமியாவையுங்
கதிர்கொள்வெங்கணையாற்களைந்தேபினர்
விதுரனல்விருந்தாகியவித்தக
னுதரபந்தனத்தொண்சுடர்வாழியே. (௫)

பார்புனற்கனல்கால்வெளியாய்ப்பரந்
தோர்குதற்கெளிதாகுஞ்சுடருளார்
சீர்பலித்தசெந்தாமரையாயமர்
மார்பிலுற்றகவுத்துவம்வாழியே. (௬)

பேயினுருவாம்பறதிபம்வீழ்த்தெழில்
வேயினேழிசையூதிவிளங்குவா
னுயன்மாலரங்கத்துறைறவான்செய்ய
வாயும்வாழிமுறுவலும்வாழியே. (எ)

முண்டகத்திறைவன்முனிவோரண்டர்
தெண்டிரைக்கடலெண்சயிலந்திக
ழுண்டாண்டமுந்தன்னகடாரவே
யுண்டகண்டத்தொருமுதல்வாழியே. (அ)

மண்ணையுண்டுபின்மத்தடியுண்டுசோர்
வெண்ணையுண்டுவைதிரிசையூதுவோ
னுண்ணயற்குபரந்தொளியேதிகழ்
கண்ணிணைக்கருணைநிதிவாழியே. (கூ)

வேறு. அருமுகக்கானுடன்அ-னன்திரிபுர
வருமுகிற்குலமெனப்பொருதுளோர்மடியவே
யெரிமுகக்கணைவிடுத்தருளுமெம்பிரானார்
திருமுகத்தொளிர்தவச்செவ்வியும்வாழியே. (க0)

வேறு. வாலிமாளமராமரம்வீழவேழ்
வேலைநீரழன்மேவவிராவணன்
காலன்வாயுறவாழிகடாவுவா
னீலமேனிநிறைகவின்வாழியே. (கக)

சகடுதைத்துப்பொடிபடச்சாடிவெம்
பகடுடைக்கஞ்சன்மார்பினிறபாய்ந்தவன்
முகடுமுட்டியபாதமுராரிதன்
மகுடமுற்றமணிகளும்வாழியே. (கஉ)

உகிரினாலன்றிரணியன்வல்லுரம்
வகிரநீள்வயிரூர்குடன்மார்பினிற்
சிகரமேற்புரள்பாம்பெனச்சேர்த்துவான்
றிகிரிவாழியச்செங்கையும்வாழியே. (கங)

அங்கராசனைடற்றுரியோதனன்
சங்கையோடச்சகுனிமருகியா
மங்கைகேள்வன்மடியவன்றூதிய
சங்கம்வாழிதடக்கையும்வாழியே. (கச)

சரங்களால்வெண்கபிலையன்றேந்திறேன்
சிரங்கள்வீழச்சினவனுளாற்பெறும்
வரங்கண்மாய்த்தவன்மார்பினைக்கோட்டின்
சரங்களைவிடுஞ்சார்ங்கமும்வாழியே. (கரு)

ஆழிமாலிரதஞ்சிலைதாளிற
வாளிதூவியிராவணைவஞ்சக
னாவிவாவென்றருள்செய்தாரணன்
வாளும்வாழிமலர்க்கையும்வாழியே (௧௬)

சண்டகக்கும்பகன்னன்கைகால்சிரந்
துண்டகண்டங்களாகத்துணித்தபி
னண்டர்மிண்டவன்றுனிமைமேய்த்தவன்
றண்டும்வாழிதடக்கையும்வாழியே. (௧௭)

வேறு. வெந்திறலவுணன்சேயைவெருண்டெழுந்தடர்த்ததூணின்
வந்தெழுகனகன்மார்பைப்பிளந்தவன்மடங்கன்மூர்த்தி
சிந்தையிற்கதங்களோவித்திருவருள்புரியச்சேர்ந்த
நந்தொளிர்கரச்சீரங்கநாயகிமலர்த்தாள்வாழி. (௧௮)

வேறு. மூரணிழந்துபொற்கணன்முடியவேனமாகுவான்
சரணடைந்துகவினுறச்சதுமறைக்குயவல்வதாம்
பொருணயந்தசரிதைமால்புகலவேமகிழ்ந்தரு
டரணிமங்கைமரைமலர்த்தாள்கள்வாழிவாழியே. (௧௯)

வேறு. பாண்டுமைந்தர்களுய்யவேபடவரவுயர்த்தோன்
மாண்டுவீழ்ந்திடமகபதிசுதனுக்குமணித்தேர்
தூண்டுசாரதியாகியசோதிதன்றேவி
நீண்டகன்றகண்ணினையார்மலர்ப்பதம்வாழி. (௨௦)

வேறு. போதனோடமரராகிப்புனலணிசடையனாகி
வேதமாயகண்டமாகிவிண்ணுமாய்முனிவரோத்து
மாதியாமரங்கராசரணைத்தருடேவியான
கோதையாய்க்கோதைசூடிக்கொடுத்தவள்வாழிவாழி. (௨௧)

இரணியன்சிறுவன்றன்னையெரியினிட்டப்பினுய்த்து
முரணியகரிமுன்னிட்டுமுகடுறுஞ்சிகரமேற்றித்
தரணியிற்றள்ளும்போதுந்தாளினைந்தோதுநாமப்
பிரணவவடிவமானபேரெழில்விமானம்வாழி. (௨௨)

மாயையில்வந்தமானைவடித்தகோற்கிலக்காக்கிப்
பேயிருண்டகண்ணன்பின்னவனுகமுந்தித்
ஆயதென்னரங்கராசர்துயில்கொளவணையாத்தோன்றி
யாயிரஞ்சுடிகையோங்கியமர்திருவனந்தன்வாழி. (௨௩)

வேறு. திருடிவெண்ணையயின்றுசெயிருரு
முருடொடுங்கமுரணைமுனிந்தவன்
பருடவுத்தமன்பொற்பதமேந்துகைக்
கருடராசன்கழலிணைவாழியே. (௨௪)

வேறு. வானோர்பதிமாமலரோனகர்மற்றுமற்றும்
போனாழியாப்பதமிதுபொலிந்துதோன்றிக்
கானாரடந்தருள்கண்ணனைக்காட்டியாட்கொள்
சேனாபதிவாழியச்சேனையும்வாழிவாழி. (உ௫)

வேறு. வஞ்சகரிலங்கைமேவிமைதிலிசரணம்வாழ்த்தி
யஞ்சியவரக்கரோடவக்கனையரைத்திட்டவ்வூர்
துஞ்சவல்லெரிமடுத்துச்சூடாமணிகொண்டுமீண்ட
வஞ்சனைசிறுவனானவரிகுலவீரன்வாழி. (உ௬)

வேறு. தயிருவெண்ணெய்களவினுண்டுதாயுமாகிவந்தபே
யுயிருமுண்டெவ்வுலகுமுண்டகண்டராரணத்துளார்
வயிரமாரமு[illegible]கண்மின்[illegible]மண்டபத்தில்வாயில்சார்
செயிரிலங்கு[illegible]விசையர்வாழிசீரரங்கம்வாழியே. (உ௭)

வேறு. மீனமாயவண்ணனுடல்விளைத்தயன்முன்விமானமேற்றோன்றியம்மனு
வின், சூனுவின்றவத்தாலயோத்தியினெய்திச்சுடர்முடியிராமனீந்திட
வே, யீனமிலிலங்கைவீடணன்கொடுசென்றிந்துபுட்கரணியினிறுத்த,
மாநதியிரண்டாய்வளையரங்கத்தின்வயங்கியவரங்கனார்வாழி. (உ௮)

வேறு. சூதுமாபாதகங்கயேசெய்ந்நன்றிகுன்று
மேதமாதவர்கடம்மையிகழுபசாரமெல்லா
மூதையாற்பாறுபூழையீதெனவகற்றியோங்குஞ்
சேறுமாதவனுமெங்கோன்றிருவடிவாழிவாழி. (உ௯)

இல்லாணின்றியம்புசொல்லாலிடர்க்கடலழுந்துதாதை
சொல்லாணியாகநாடுதுறந்தடர்கானினேகிப்
பல்லாணிமுத்தாங்கஞ்சப்பாவைபாலேகவேண்டிப்
புல்லாணிநகரின்மேவும்பொருசிலையிராமன்வாழி. (௩௦)

வேறு. கருவனந்திரண்டமேகமென்னமேனிகவினுறப்
பொருவிகந்ததிகிரிதண்டுபுகர்கொள்வாளிலங்கவே
மருவினந்துவன்றுசெந்நென்மதில்பிறங்கவரவின்மேற்
றிருவனந்தபுரநகர்க்குண்மேவுதேவன்வாழியே. (௩௧)

வேறு. அல்லுறவிரவிதன்னையாழியான்மறைத்துப்பார்த்தன்
வெல்லமேவமீளவாங்கிவெயிலினைக்காட்டியப்பாற்
கொல்லுதிசிந்துநாடாண்மன்னனையென்றுகூறி
வல்லமாநகரின்மேவுமாதவன்றிருத்தாள்வாழி. (௩௨)

வேறு. சுற்றலக்கோடியிடித்துச்சாபம்வாங்குந்
துன்மதிக்கஞ்சன்விடுத்ததம்பிதன்னைச்
செற்றதிற்கோட்டைக்கொண்டேயெதிருஞ்சாணூ
ரனைவதைத்துச்சிறந்தொளிருமையாள்பாகத்

நற்றவர்கோட்டைக்கரத்தினொருவனாதி
யும்பர்பிரானாதிமவாகனத்தோனேத்த
வித்துவக்கோடெனுநகரின்விந்தைமார்பின்
விளங்கிடவேயமர்விமலன்றிருத்தாள்வாழி. (௩௩)

வேறு. இறுங்கடுவினைகடேயவின்பமெய்ஞ்ஞானமெல்லா
முறுங்குடியடியராவிருற்றுநீர்தொழுமினென்றே
நறுங்கொடிமலரோனானுநவிலநாரதனோத்தக்
குறுங்குடிமேவிநின்றகோவிந்தநம்பிவாழி. (௩௪)

வேறு. நலங்கொளுஞ்சடகோபனார்நவின்றவாரணச்சொல்
விலங்குமெய்த்திருவாய்மொழியினிதுவந்துணைப்போர்
குலங்கள்சூழ்குருகூர்தனிற்கொழுமுகில்போலப்
பொலிந்துநின்றவெம்பிரான்பதப்போதுகள்வாழி. (௩௫)

வேறு. புகர்முகங்கொள்புகலிபம்வெந்துயரமெய்திப்
பொய்கையினிற்கரமெடுத்தன்றோலமென்றே
பகருமுனரடைந்தடருங்கராவைச்செற்றுப்
பாஞ்சசன்னியத்துடனேநேமியேந்திச்
சுகரைநிகர்மறையவர்கண்மகிழ்வினோடு
சூழ்ந்திடவேதென்றிருப்பேர்நகரினோரா
மகரநெடுங்குழைக்காதுவயங்கவைகு
மாதவனார்திருத்தாள்களூழிவாழி. (௩௬)

வேறு. ஆடகமதில்சூழ்ந்திலங்கரிமேயவிண்ணகரமரிவாழி
வேடனையருள்வெள்ளக்குளத்தமரும்வித்தகன்றாளிணைவாழி
நீடுசித்திரத்தேர்வலவனாரிலங்குநிகரிலாத்திருப்பதிவாழி
சேடனிற்றுயில்கள்ளப்பிரான்வைகுஞ்சீர்மலிவைகுந்தம்வாழி. (௩௭)

ஒன்னலார்வயல்சூழ்வரகுணமங்கைநகருறைகாகுத்தன்வாழி
யின்னலில்குளந்தையிலங்கியமாயக்கூத்தர்தம்பிணையடிவாழி
பொன்னகரெனவேபுகழ்மலைநாட்டிற்பொலிநந்தபுரத்தண்ணல்வாழி
யன்னமென்னடையாரமருவண்பரிசாரத்திருநகரரிவாழி. (௩௮)

வேறு. வெரீயுறச்சாதகரொயதக்கலர்களானோர்
மெலிந்துடலினாவிவிடவரற்றிச்சுற்றத்
தரீமமுறவேயந்தத்தனுவைச்சேர்க்கச்
சான்றவரையிகழ்ந்தவரொன்றனலாருங்கண்
ணரீயமொடுசெம்புருக்கிநாவினுய்க்கு
நரகமெல்லாமழித்திடுநன்னுமச்சோதி
சீரீவரமங்கலநகரிற்றிருவினோடுஞ்
சிறந்திருக்குமாநகரீசவர்திருத்தாள்வாழி. (௩௯)

# திருவரங்கப்படலம்.

வேறு. அருவநற்பதிவிளையத்துலங்கவேவரந்
தருவனந்திகழ்வுறுஞ்சார்ங்கபாணியாய்க்
கருவெனமுகிலெனக்கமலைதன்னெடுந்
திருவண்வண்டூருறைசெல்வன்வாழியே. (௪௦)

சிலைவலியிடரினைத்தீர்த்துப்பத்தர்கட்
கலைவிலின்பந்தரும்பதமளிக்கப்பொற்
கலைவில்லினிளவெயிற்கவினைக்காட்டவாழ்
தொலைவில்லிமங்கலச்சோதிவாழியே. (௪௧)

வேறு. செருக்காளியுகந்துநோக்கத்திரண்டெழுமலைக்கூட்ட
முருக்காளவரைபோலாடவும்பன்மாவிரதஞ்சீய
நெருக்காழியரக்கர்மாளநிருதர்கோன்றலைகணீக்கித்
திருக்கோளூரிலங்கமேவுந்திருவினாயகன்றாள்வாழி. (௪௨)

வேறு. கருமாறவுயர்ந்தநற்கதியைக்காட்டுசெற்
குருமாறனுரைமறைத்தமிழுவந்தகோ
வருமாறியடைந்துசெல்லுழையைச்செற்றவன்
திருவாறன்விளைநகர்ச்செல்வன்வாழியே. (௪௩)

வேறு. கரிச்சங்கமிவுளியினம்யாளிசீயங்
கடல்புடைசூழிலங்கைநகர்நிருதரெல்லா
மரிச்செங்குமலைகளெனக்குரம்பைவீழ
வாளியினாற்கொய்துதசமுகனைவீட்டி
வரிச்சங்கங்கதைநேமிகுனியுஞ்சார்ங்கம்
வாளிலங்கமாகுமரன்மருங்குசூழத்
திருச்செங்குன்றூரதனிற்றிருச்சிற்றாற்றுச்
சிற்றாயன்றிருவடித்தாமரைகள்வாழி. (௪௪)

வேறு. எருக்கடுத்திண்டைசேரும்வேணியனிடைநீக்கித்
திருக்கடித்தாரினோடுஞ்சிறந்தொளிமார்பினோங்க
விருக்கடித்தானமாகவிரும்பிடுமறையோரோத்தத்
திருக்கடித்தானமேவுஞ்சீதரன்கழல்கள்வாழி. (௪௫)

வேறு. அட்டநாட்டத்தயனஞ்சிடத்தன்பெயரண்டாண்ட
முட்டநாட்டிப்பரனில்லையென்றேயெழுமீதின்மோதுந்
துட்டநாட்டுத்திலமிற்றெனவீர்ந்திடத்தூளியாக்குங்
குட்டநாட்டுப்புலியூருறைகோளரிதாள்கள்வாழி. (௪௬)

வேறு. பளிங்கொளிர்வராகமாகிப்படியினையெயிற்றாலேந்திக்
களங்கமுன்மலியும்வெய்யகனகன்றன்கனிட்டன்றன்னை
வளங்கிளராழியேவிவதைத்துமண்மடந்தைபோற்றப்
புளிங்குடிநகரின்மேவும்புராதனமுராரிவாழி. (௪௭)

பார்க்கரன்சோமனெய்திப்படிந்தபோலாழிகோடி
சீர்க்கரயிசைசயிறுங்கச்சினத்தெதிர்மாலியோடு
மூர்க்காமராக்காதம்மைமுடுக்கியேகடிதிற்செற்ற
கார்க்கரையப்பன்றுய்யகழலிணைவாழிவாழி. (௪௮)

வேறு. பருமேழைதனினிரதப்பானிறையமுகந்ததனைப்பருகியேதான்
வருமூழிற்பலம்வாய்த்தவன்னையெனுமசோதைமுனநடித்துவானி
னிளமோழற்படிவமதாயெழுந்தெயிற்குற்புடவிதனையெளிதினேந்தித்
திருமூழிக்களத்துறையுஞ்செல்வனார்திருத்தாள்கள்வாழிவாழி. (௪௯)

வேறு. மூவாமுதலாயுயர்மூர்த்திகண்மூவராகி
மாவாய்பிளந்தேமதமாகரிகோடுவாங்கிக்
கோவாகியவஞ்சகக்கஞ்சனைநொய்திற்கொன்ற
நாவாயுறைநாரணநம்பிதன்றாள்கள்வாழி. (௫௦)

நாட்டாட்டணிப்போதுறைநான்முகன்போற்றிசெய்யக்
காட்டானையைக்காத்தடர்நக்கரத்தைக்கடிந்து
கோட்டாற்கடனீரமிழ்பாரினைக்கோத்தெடுத்தே
வாட்டாற்றுறைமாதவன்றன்பதம்வாழிவாழி. (௫௧)

வேறு. கொடிகள்கோபுரங்களோங்குவில்லிபுத்தூரிற்கோதை
கடிகமழ்கழுநீர்முல்லைகருமுகைகலந்துகாட்சித்
தொடையினைக்குழன்மேற்சூடிக்கொடுத்திடமகிழ்ந்தசோதி
வடபெருங்கோயின்மேவுமன்னனார்தாள்கள்வாழி. (௫௨)

வேறு. உருத்தங்காவெனவில்வாய்விரிக்கும்பூத
கணத்தினுடனுமைகொழுநன்சுதர்களோடுஞ்
செருத்தங்காதோடிடவேவிசிகந்தூவிச்
சினத்தெதிரும்வாணனார்புயங்களெல்லா
மாத்தங்கான்றிடத்துணியவாழியேவி
யனுருத்தனுடாங்கனையைவதுவைசெய்யத்
திருத்தண்காற்றிருப்பதியினொருநாட்டங்கி
னின்றருளுநதேவர்பிரான்றிருத்தாள்வாழி. (௫௩)

வேறு. ஏடலர்தார்தென்னவர்கோனேற்றிடவேபல்லாண்டு
பாடியுயர்கிழியறுத்தபட்டர்பிரான்கண்களிப்ப
வாடகவம்பாமிலங்கவாழிவனையேந்தியமா
கூடலழகியபெருமான்கோகனகத்தாள்வாழி. (௫௪)

வேறு. வருமோகூன்றெழுத்தையாலிவ்வல்வினைவள்ளல்வந்து
பொருமோர்கூர்வாளியாலேயிராவணன்பொன்றவென்றி
தருமோகோவென்றமின்னின்சிறைதவிர்த்தவடன்றேடுந்
திருமோகூரிலங்குகின்றசெழுஞ்சிலையிராமன்வாழி. (௫௫)

வேறு. பாலிருங்கடலிற்பாந்தளோவியேபங்கயத்தின்
மேலிருங்கண்ணுண்மார்பின்விளங்கிடவமரர்போற்றத்
தோலிருங்கயத்திஞாலமென்னமுன்றோன்றியிம்பர்
மாலிருஞ்சோலைமேவிவயங்கியவழகர்வாழி. (௫௬)

உருக்காட்டிவிசையன்றேறவோதியகீதைகாட்டிச்
செருக்காட்டிப்பெருகுங்கங்கைசிறுவன்முன்றிகிரிகாட்டிக்
கருக்கோட்டைக்குமாணுகக்கழலிணைமிதித்துக்காட்டி
திருக்கோட்டியூர்நின்றதெய்வங்கள்பெருமாள்வாழி. (௫௭)

வேறு. நள்ளிவயல்சூழுறந்தைநம்பெருமான்றாள்வாழி
தெள்ளியர்கள்செயுமன்பிற்றேவதேவன்வாழி
கள்ளவிழ்சோலைக்கரம்பனூரமர்கண்ணன்வாழி
புள்ளம்பூதங்குடியிற்போரேறுவாழியரோ. (௫௮)

வேறு. அண்டர்கடுதிக்குமாதனூராராவணையோன்வாழி
தொண்டர்களேத்துஞ்சேறைதுலங்கியவிராமன்வாழி
முண்டகவாவிசூழ்நாண்மதியமுராரிவாழி
கண்டியூர்நீலகண்டன்கடுவினைகளைந்தான்வாழி. (௫௯)

வெறியுறுபூங்காச்சூழ்வேதநான்குடனேமெய்யா
ரறனுறுமாலிதன்னினமருளாளன்வாழி
நறுநெய்பானுகருநந்திபுரவிண்ணகரோன்வாழி
மறைநிறைகூடலூரிலிலங்கியமாயோன்வாழி. (௬௦)

வேறு. பாந்தளேயணையாய்ப்பள்ளிகொள்பார்த்தன்பள்ளியினிலங்கரிவாழி
மாந்தளிர்நிகர்மெய்மாதர்களுறைமண்டங்குடிமாதவன்வாழி
நாந்தகமிலங்கவவிர்கொண்மெய்யத்தினகரமர்நாரணன்வாழி
சேந்தொளிரனஞ்சூழ்செம்பொன்செய்கோயிற்சீதரன்றாளிணைவாழி.

தேன்மலர்ப்பொழிலாருந்திருத்தெற்றியம்பலச்செங்கண்மால்வாழி
மீனெனவியங்குநயனமங்கையர்சேர்விண்ணகரத்தரிவாழி
யானிரைமலியுங்கவித்தலத்தமருமச்சுதன்றாளிணைவாழி
வானவர்புகழ்வைகுந்தவிண்ணகரினமர்புருடோத்தமன்வாழி. (௬௨)

காகமோர்நயனங்கழன்றிடத்திரணங்கடாவியேகானுயிர்களைந்து
சாகரத்தரிகள்பிறங்கலானெறியைத்தரவிலங்காபுரியடைந்து
மேகநாதனதிகாயன்விச்சிரவாமதலையோடனுசனைவீட்டி
நாகையாம்பதியினழகனாய்வயங்குநாரணன்றிருவடிவாழி. (௬௩)

வேறு. கண்டகன்காகன்போசன்காசிபன்சேதிராசன்
மண்டனின்மடியமோதிமலருளோன்வலாரிவாறே
றொண்டவருடனேபோற்றவிராசமாநகரின்மேவுஞ்
செண்டலங்காரமன்னன்றிருவடிவாழிவாழி. (௬௪)

தும்பிக்கையுடையோனன்னை துணுக்கிடச்சுரர்களெல்லாங்
கம்பிக்கக்கயிலைதன்னைக்கரத்தினாலெடுத்தோனுக்கை
யம்புக்கன்றிலக்கமாக்கியழகியநறையூர்மேவு
நம்பிக்கைநாச்சியார்தந்நாயகன்றாள்கள்வாழி. (௬௫)

மறைக்கடிமலரோன்போற்றவாளியாலிருதரோடுஞ்
செருக்கணிகரத்தனைதசக்கிரிவனையுஞ்செற்றே
யெரிக்கண்ணன்வியப்பவண்டமேலவீரடியாற்கொண்டு
திருக்கண்ணமங்கைமேவிநின்றருடிருமால்வாழி. (௬௬)

அருக்கனற்குமரனெய்தவரவினாலுவமையில்லாத்
திருக்கிளர்பதவியாள்வோன்றனையனன்றிறவாவண்ணம்
பொருக்கெனவவன்றேர்த்தட்டைப்புட்வியினழுத்திவண்மைத்
திருக்கணங்குடியின்மேவுந்திருவினாயகன்றாள்வாழி. (௬௭)

முரட்கணைதொடுத்துவிட்டன்றிராவணன்முடிகள்பத்து
மரைக்கணமுறுதன்முன்னமறுத்தவனாவிகொண்டே
யெருக்கணிசடையினான்றனிரவொழித்தெயில்கள்சூழுந்
திருக்கணபுரத்துமேவுஞ்சீதரன்றாள்கள்வாழி. (௬௮)

வேறு. கச்சணிநகில்வீறியவுமைகொழுனனடைஞ்செயக்கமலனேடிமையோர்
நிச்சலுமுராரிதனைத்தொழும்பதியைமுன்புபோனிறுவியதிருப
னச்சுதராயன்வணங்கிடவரவினழகியதில்லையம்பதிக்கே
மைச்சுடர்வரைபோல்வயங்குகோவிந்தராயன்மாமலரடிவாழி. (௬௯)

வேறு. தருவெழுந்தபோலொளிருந்தடக்கைமீதிற்
றமனியவச்சிரக்கடையந்தயங்கக்காட்ட
வரவெழுந்துபணுமகுடங்கவிக்கப்பாலி
னலையுறும்வேலையிற்றுயில்கொளய்யன்மெய்யன்
வெருவெழுந்துசெருக்களத்தின்மாலிமாள
மாலியவான்பாறிடவேவிசிகந்தூவித்
திருவழுந்தூராமருவியப்பனனை
தேவகிதன்றிருக்குமரன்றாள்கள்வாழி. (௭௦)

மாகேழலாயளவில்வையமேந்தி
மகன்சொற்கேளாதமுனிந்தெழுவின்மோது
மாகூழிலாடகனையரியாய்ச்செற்றே
யாலிநகர்த்திருமங்கையாழ்வாரோத்த
நாகாழவாவியினிற்றுலங்கமேய்ந்து
நளினமலர்தொறுமாரவினங்கணல்குஞ்
சீகாழிவிண்ணகரில்லேகர்போற்றச்
சிறந்தமருந்தாடாளர்திருத்தாள்வாழி. (௭௧)

வேறு. ஒள்ளியபுதல்வன் றன்னையுரப்பியேயொளித்தன்றேடுங்
கள்ளனைவெளிசெய்யென்னக்கனகனங்கறைந்தூணிற்
றெள்ளியசிங்கமாகியுகிரினிலவனைச்செற்றே
வெள்ளியங்குடியின்மேவுவிண்ணவன்றிருத்தாள்வாழி. (எஉ)

மண்ணகல்வானமுண்டவாயன்மாமலரின்மேவும்
பெண்ணகமாகவைகும்பிறங்கியமார்பனீள்கற்
பண்ணகமொழியாளாகியெழுந்திடமிதித்தபாதன்
விண்ணகருறையுமப்பன்விழுமியபதங்கள்வாழி. (எங)

கடந்தருகயமன்றுய்யக்கராவினைச்செற்றுப்பூமண்
மடந்தையர்மருங்குசூழமாமறைசேர்வனசப்பொய்கைத்
தடந்தனிலிலங்கச்சற்பத்தவிசின்மேற்சயனங்கொண்டே
குடந்தையின்வயங்குமாராவமுதெனுங்கோமான்வாழி. (எச)

தீயநேர்சனகிதன்னைமணஞ்செய்யச்சிவனார்கையிற்
சாபமன்றிறுத்துமங்குற்றுளையைத்தடுத்துத்துய்ய
கோபராவுய்யக்கோவர்த்தனகிரிதன்னையேந்திப்
பாபநாசத்தின்மேவும்பரமனார்திருத்தாள்வாழி. (எரு)

வேறு. விடம்பரவுங்காளியன்றனுச்சிமீதின்
விண்ணவர்கள்வியப்புறவேநடித்துக்காட்டிக்
கடம்பெருகுகரியினுயிர்களைந்துவஞ்சக்
கஞ்சனுடனவன்கனிட்டர்தமையுஞ்செற்று
நடம்புரியுநக்கபிரானிருநாலான
நாட்டணிருடிக்கணங்கள்வலாரிபோற்றத்
தடம்பருகுகருமுகில்வாய்த்தஞ்சையாளி
சார்ந்திடுநற்பதியினமர்தலைவன்வாழி. (எசு)

வேறு. பொருப்பேசிகராகியவெண்டிசைப்பூட்கையீரு
மருப்பேயிறநேர்பொருதானுயிர்வானினேற
நெருப்பார்கணையெய்துயர்நேமியுங்கொண்டுதாங்கித்
திருப்பேருறைநாரணன்சேவடிவாழிவாழி. (எஎ)

வேறு. மங்குலையணவநீண்டமணியொளிர்சிகரமோங்கச்
சங்குகண்முழங்கப்பேரிதழுப்கிடச்சின்னமார்ப்பச்
செங்கயலுகளும்வாவிசிறந்தவெள்வளைமேற்சேரும்
பங்கயச்செல்விமார்பிற்றிகழ்பரந்தாமன்வாழி. (எஅ)

வேறு. ஏராருலகயறேடொளித்தவையுண்டுமிழ்ந்திடந்தே
ஓராயிரமுடிதோள்விழியுயர்தாள்களுமுளனும்
பேராயிரமுடையானெனப்பெருந்தேவர்கடுதிப்ப
நாராயணபுரமேவியநாதன்கழல்வாழி. (எகூ)

வேறு. வெம்பியசேதிராசனுருக்குமன்வென்னிட்டோட
அம்புவிட்டமரின்வென்றுண்டருள்செறிவிதற்பனல்குங்
கொம்பினைமணந்துதேவர்குழாந்துதிசெய்யநின்ற
பம்பையிற்பாண்டரங்கவிட்டலன்பாதம்வாழி. (அ0)

நத்தூரும்வயல்கொள்பூகாடிரந்தவைபெருமற்
பத்தூரிற்பாதிவேண்டக்கொடாதவன்படியிலோங்க
வொத்தூரும்பிளந்துவீழவீமனுக்குறுதிகாட்டி
வித்தூரிற்பள்ளிகொள்ளும்விமலனார்திருத்தாள்வாழி. (அக)

ஏதமார்முழைக்கண்ணனென்புகளொடியக்கோட்டாற்
காதியார்கலியின்வீழுங்காசினிதனையிடந்து
பூதலமானுக்கன்பாற்புராணமுமருளிமுட்டத்
தாதியாம்வராகமூர்த்தியடியிணைவாழிவாழி. (அஉ)

தருக்கோடன்றவுணனீயுமூவடிதானமேற்றே
யிருக்கோதுமறையோர்போற்றவுலகமீரடியாற்கொண்டு
மருக்கோடுகமழுநாகம்வழைசெழுவகுளம்பூத்த
திருக்கோவலூரின்மேவிநின்றருடிருமால்வாழி. (அந)

சந்திரன்றபனன்பக்கமிரண்டினுஞ்சார்ந்தமான
நந்துசெந்திகிரியேந்துநற்கரநயனம்பாதம்
சுந்தரத்தோள்கண்மார்பம்வதனம்வாய்துலங்கநேரி
லிந்தளப்பதியின்மேவுமிந்திரைகொழுனன்வாழி. (அச)

நச்சிமெய்க்கமலன்வேதநவின்றுசெய்வேள்விநாப்பண்
மைச்சுடர்க்கிரிபோன்மேனிவயங்கிடமவுலிமின்ன
வச்சுதப்பெயரினானென்றமரர்கள்போற்றிநின்ற
கச்சியத்திகிரிநாதன்கழலிணைவாழிவாழி. (அரு)

வேறு. திங்கடங்குசடையன்மேவுகச்சிவீதிதிகழநற்
பங்கயத்தினயன்வலாரிமுனிவர்தேவர்பணியவே
கங்கைகொண்டமண்டபத்தினிற்சிறந்தகலுழன்மேன்
மங்குலாமெனக்குலாவுவரதராசர்வாழியே. (அசு)

வேறு. வருந்தாரளகப்பதிக்கைத்தலவோடுமாற்றிக்
குருந்தேறிநின்றுச்சியர்கூறைகள்கொள்ளைகொண்டே
விருந்தாவனத்தெய்தியதிகிரிவாய்மாயன்மேவு
பெருந்தேவியெனுந்திருப்பீதகத்தாள்கள்வாழி. (அஎ)

வேறு. நேயமார்மழிசையாழ்வார்நிகரிலாக்கணிகண்ணன்றன்
காயுமவ்வளவன்சொல்லாற்கச்சிவிட்டேகுகின்றன்
மாயவயானுஞ்செல்வேனீயும்வாவென்னச்சேடப்
பாயலைச்சுருட்டியன்றுசென்றருள்பரமன்வாழி. (அஅ)

வேறு. துச்சமிலாச்சங்கத்தொண்டர்க்கின்புறவேகோளரியாயெழுவிற்றெ
யச்சமிலாத்துங்கத்தண்டர்க்கந்தகனாமாடகனாருரமேகிறிப் [ன்றி
பிச்சையிலா தங்கைத்தண்டைச்செங்கழலாற்பீடுறவேநலனாயோங்கும்
கச்சிநிலாத்திங்கட்டுண்டத்தெம்பெருமானார்பூம்பொற்கழல்கள்வாழி.

வேறு. வெறிசெறிபொழில்சூழிந்திரபுரத்தின்வித்தகன்வாழிவெஃகாவி
னுறையரிவாழியுவமையில்பரமேச்சுரவிண்ணகரத்துள்ளோன்வாழி
மறையவர்திரள்சேர்பாடகப்பதியின்வயங்கியமாதவன்வாழி
பொறியுறுதிருத்தண்காக்கவினுறவேபொலிதருகருமுகில்வாழி. (௧0)

நீரகத்துறையுநிமலனார்வாழிநிகரிலாவேட்கைமால்வாழி
காரகத்தமர்வோன்வாழிகார்வானத்தச்சுதன்வாழியொண்கள்வ
னூரகத்துலங்குமுத்தமன்வாழியுவமையில்கடிநகர்வயங்கு
மாரியன்வாழிசிறந்திடுமட்டபுயத்தமரமலனார்வாழி. (௧௧)

மருமலர்பொழில்சூழுங்கடன்மல்லைநகருறைமாயவன்வாழி
சுரர்தொழுதிலங்குதிருப்பிருதியினிற்சோதிதன்றுளிணைவாழி
திரையுறுநதிகளிலங்கிடப்பொழில்கள்சிறந்திடக்குயிலினங்கூவ
வரியுறுமணக்கத்தரிவைசேர்வைகுந்தத்தினிலமரரிவாழி. (௧௨)

வேறு. நிகரறநின்றவூரினித்திலத்தெந்தைவாழி
சிகரஞ்செல்லுறுவேளுக்கையினிலமர்தேவன்வாழி
புகரிபக்கோடுவாங்கிப்பொருதநீர்மலையோன்வாழி
சுகர்நிகரந்தணாளர்சூழிடவெந்தைவாழி. (௧௩)

வெறு. மாதவரினஞ்சேர்காவளம்பாடிவயங்கியமாதவன்வாழி
போதின்மாதுடனேதொண்டனூரிலங்கும்புதுவைமின்னாயகன்வாழி
கோதிலாமேலைக்கோட்டியூரமருங்கோவிந்தன்கழலிணைவாழி
சூதமார்வேலூர்புரிதனிற்சென்னராயனுஞ்சோதிதாள்வாழி. (௧௪)

வேறு. நெருப்புக்கணினாலுலகெங்கணுநீறுசெய்வான்
பொருப்பைக்கரத்தாலெடுத்தெண்டிசைப்போதகத்தின்
மருப்புற்றிடவேபொருதானுயிர்வவ்விவண்மைத்
திருப்புட்குழிவாழுமிராகவதேவன்வாழி. (௧௫)

வேறு. கொக்காரத்தொடுமேவக்கிஞ்சுகங்கள்கொஞ்சிடவேகுயில்கள்கூவ
விக்காரமுகுத்திடவேயிலங்குகடிகாசலத்தேழ்முனிவரோத்தத்
தக்கானைத்தமனியன்றனுரம்வகிர்ந்துமற்றவன்றன்றனையற்கென்று
மக்காரக்கனியாகியமர்ந்தருளுங்கோளரிதன்னடிகள்வாழி. (௧௬)

வேறு. வெவ்விடமதுகையிடவரோடளப்பிலமர்செய்தங்கவருயிர்வீட்டி
யவ்வியமகன்மாமுனிவனாச்சிரமத்தமர்ந்துசெய்தாசினீர்பருகி [ங்க
ணமேவணமுகின்மேல்வனசமாமலர்கண்மலிந்தபோன்மெய்யெலாமய
வெவ்வுளினரவின்மிசைத்துயில்வீரராகவனிருபதம்வாழி. (௧௭)

வேறு. பொருவில்லிக்காகமைந்தன்றனைத்தந்தபுண்டரீகத்
தொருவல்லிக்காகமீய்ந்தோயோலமென்றழைத்ததொல்லை
வெருவல்லிக்கரவாலன்றுவெந்திறற்றிகிரிவிட்டே
திருவல்லிக்கேணிமேவுதேவநாயகன்றாள்வாழி. (௯௮)

கல்லைக்காற்பொடியானுரியாக்கியேகவின்கொண்டோங்கு
நெல்லிக்கோடுயரப்பூகந்நிறைந்திடும்வயல்கள்சூழ
வல்லைக்காய்மணிகொண்மாடத்திருப்பதியணுகிவாழுந்
தில்லைக்கோவிந்தராசன்றிருவடிவாழிவாழி. (௯௯)

தீங்கடர்பிறப்புத்திரத்திரள்பசிமூப்புநோய்க
ணீங்கிடஞானமெல்லாநிறைந்துமாமுத்திநேரப்
பூங்கொடிதிகழுமார்பிற்கவுத்துவம்பொற்கொண்டோங்கி
வேங்கடமிலங்கநின்றவித்தகன்கழல்கள்வாழி. (௧௦௦)

வேறு. சலமேலெங்குந்தாவியவாவி
னிலைமேலெய்தியெழிலஞ்சனமா
மலைமேனின்றான்மார்பின்வயங்கு
மலைமேன்மங்கையடியிணைவாழி. (௧௦௧)

வேறு. பவவெள்ளத்தழுந்தாதையபரனெங்குமுளான்பாரென்னுந்
தவமுளசிறுவன்சொல்லையிகழ்ந்தறைதறியினண்டம்
புவிபிளந்திடவேதோன்றிப்பொன்னவனுகம்போழ்ந்த
வவுபழநாரசிங்கனடியிணைவாழிவாழி. (௧௦௨)

வேறு. மங்காத்திருமைந்தனைவைதடருமவுணன்
வெங்காத்திரமோடறைதூணினுண்மீளியாகி
அங்காத்துகிராலவனாக்கைபிளந்தவோங்கு
சிங்காத்திருமாநகர்மேவியசீயம்வாழி. (௧௦௩)

வேறு. சுகநாதகீதமோதுஞ்சுரர்முனிதுதிப்பவெள்ளி
நகநாதனிடரைமாற்றிநான்முகனுகர்கோமான்
ககநாதன்முதலோர்போற்றக்கடகமன்னிறைஞ்சவாழுஞ்
செகநாதமேவுமெங்கோன்றிருவடிவாழிவாழி. (௧௦௪)

வேறு. பழியளவிலபவமெண்ணிலசெய்தே
பலவிதமாகியகொடுமைசெய்நிறையக்
குழியிடைமறுகிமெய்குலைபவர்தங்கள்
குலம்வருவானொருவன்குறுகியபோ
தழிவிலதாகியகதியினையாறு
மாறுடனென்பதுதலைமுறையடைய
வழியருளும்பிரயாகையில்வாழும்
மாதவனிருமலரடிவாழி. (௧௦௫)

வேறு. வெங்கைமாமூலமென்னக்கராவினைவிழவேவீட்டிச்
சங்கைமாவிசையற்காகச்சமரின்வாய்மலரினாதி
யங்கைமானீசனேற்குமருவினையகலநீக்கும்
கங்கைமாநதிசூழ்கண்டக்கடிநகரரிதாள்வாழி. (க0சு)

எதிரிலாக்கனகன்றன்னையிருகையாற்பிளவுசெய்தே
சதிரினாலிலங்கைவேந்தன்றலைகளைத்தடிந்தருத்தி
சுதரொலாமுய்யத்தீயசுயோதனன்மடியச்செய்த
வதரிநாரணனாமெங்கோன்மலர்ப்பதம்வாழிவாழி. (க0எ)

உயிர்தொறுமுளனாய்வேதத்துச்சியினிறைந்துதுய்ய
கயமழைத்திடுமுன்னெய்திக்கராவினைவதைத்துவேத
னயமுறுசடிலனாகண்டலனுடனமரர்போற்ற
நயிமிசாரணியத்தெய்துநாரணன்கழல்கள்வாழி. (க0அ)

உக்கிரக்கனகன்றன்னையுகிரினாற்பிளவுசெய்தே
நக்கனைக்கிரியினோடேயெடுத்தநாலைந்துகையான்
கொக்கரித்தெறிந்தசூலமுதிர்த்தவனாவிகொண்ட
சக்கரத்தெழில்கொள்சாளக்கிராமநாதன்றாள்வாழி. (க0கூ)

முட்கரக்கரன்றன்னோடுமவன்கிளைமுடியவாண்மை
உட்கரச்சிரங்களெண்ணிலுறவுலர்பாதவத்தின்
சுட்கம்வெந்திறப்பாய்வன்னியெனச்சுடுசரங்களேவிப்
புட்கரப்பதியின்மேவும்பொறியுறுமார்பன்வாழி. (கக0)

வேறு. சுரரிவையர்போற்பொதுவர்தம்மாதர்துலங்குமாய்ப்பாடியான்வா
திருவுடன்றுவரைப்பதியினில்வயங்குதேவகிகுமரன்றாள்வாழி [ழி
வரசர்கடுதிப்பவயோத்தியினிலங்குமருள்செறிராகவன்வாழி
பருதிபோலவிர்கொண்மணியுறுமரவின்பாற்கடற்றுயிலரிவாழி. (ககக)

வேறு. பொய்கையுயர்பூதத்தார்பேயார்மிக்க
புகன்மழிசைமாமறையோன்சேரர்கோமான்
வையகமெண்புதுவையர்கோன்மாறன்றொண்ட
ரடிப்பொடிபாணாழ்வார்சீர்மங்கைவேந்தன்

றுய்யமறைப்பொருணுறவேயிவரீரைவர்
தோத்திரஞ்செய்நாற்றெட்டுத்திருமுற்றத்தின்
செய்யமலர்மங்கைநிலமங்கைசூழச்
சிறந்தமருந்தேவர்திருவடிகள்வாழி. (ககஉ)

வேறு. இரணியன்சிறுவன்சுரர்முனிசமதக்கினியசேயெழில்கொள்புண்டரீக
ரருமறைபகர்ந்தோனுயருமம்பரீடனருள்செறிசுகன்சவுனகன்றன்
வரநதிபுதல்வன்றுப்பியனுருக்குமாங்கதன்றனஞ்செயன்வசிட்டன்
பரவைசூழிலங்கைவீடணன்முதலாம்பரமபாகவதரும்வாழி. (ககங)

வேறு. வைகுபோதின்மாரியாலும்வாடியேசில்கோவலூ
ருய்கவேதியன்கொடுத்தவிடைகழிக்குளுற்றிரா
வைகிஞானநல்விளக்கின்மாயன்மேனிகண்டுளார்
பொய்கைபூதர்பேயரானபுநிதர்வாழிவாழியே. (கக௪)

வேறு, மொழிசெய்பல்சமயங்களுமூழ்கியே
வழிசெய்யாதெனமாற்றில்வீடருள்
சுழிசெய்சானவிபாதனைச்சூழ்ந்துவாழ்
மழிசைமாமறையோனென்றும்வாழியே. (கக௫)

வேறு. சிலைசேர்கரனாருயிர்கொன்றவிக்கொண்டறேவி
வலிசேர்கராவணன்றேர்மிசைபோகும்வாய்மை
யொலிசேருமுனைங்கடவோடுதியென்றுசென்ற
குலசேகரனாகியகொற்றவன்வாழிவாழி. (கக௬)

வேறு. அதுவிதென்றயராதுபல்லாண்டுரைத்
துதவியேமுகுந்தற்கொளிர்கோதையார்
வதுவையாகநன்மாதுலனாகிவாழ்
புதுவையந்தணர்பொற்பதம்வாழியே. (கக௭)

வேறு. ஆறங்கமுநால்வேதமுமறையும்பொருளெல்லாம்
நூறுமிருநூறுமெழுநூறும்பெறநுவல்வோன்
வீறுந்திரைநதிசூழ்ந்திடுகுருகாநகர்மேவு
மாறன்சடகோபன்றிருவடித்தாமரைவாழி. (கக௮)

வேறு. அண்டரடிப்பொடியெனவே
யுரைத்துழக்குங்கும்பகன்னனாதியாகுந்
துண்டரிடிப்படமுழக்கிச்சூழ்ந்தவரைக்
கணைகளினூற்றுணித்தசோதி
கொண்டலடிப்பொடியின்மலர்க்குழலியைக்கல்
லுருவகற்றுங்குணங்கள்கூறுந்
தொண்டரடிப்பொடிமண்டங்குடிமறையோன்
றாளிணைகடுலங்கிவாழி. (கக௯)

வேறு. பூணாரம்பொன்னினுடையார்பொலி
சேணாருந்திருமேனிகண்டகண்
காணாமற்றவையென்றுங்கைதொழும்
பாணாழ்வார்திருப்பாதம்வாழியே. (க௨0)

வேறு. சதுரார்சதுமறைதமிழினுதவிய
வெதிரின்மகிழ்மலரணியுமிவனொன
முதிருமொழியொருபதினொருவர்செயு
மதுரகவியடிமலர்கள்வாழியே. (க௨க)

வேறு. செங்கண்மாலுடன்செந்திருவைத்தனைத்
தெந்துமானவனெட்டெழுத்தோதிய
சங்கைபோகத்திருமொழிசாற்றினோன்
மங்கைவேந்தன்கலிகன்றிவாழியே. (கஉஉ)

வேறு. அராமீதமர்வாய்கரியுந்திடவாழியினைக்
கராமீதுறவேவிடுவாய்கருணாகரரா
மராமாவெனநான்மறைமல்கிடவேயுதிசெய்
யிராமானுசமாமுனிதாளிணையென்றும்வாழி. (கஉங)

வேறு. நாரணனளினமிலங்கியதிருச்சேறைபதிசெந்தமிழிசைய [முன்
வாரணமறைந்தோனருள்செறிநாதமுனியுய்யக்கொண்டவந்தணன்
சீரணிமணக்காநம்பிதொல்புகழ்சேராளவந்தார்திகழ்சுரும்பார்
தாரணிபெரியநம்பிநல்லிராமானுசனிவர்தாளிணைவாழி. (கஉச)

வேறு. கோரத்தாலேபழுக்கொண்டகண்டன்சபைமே
னூரத்தானையிறையென்றசொன்னனைவே
யோரத்தானைதுரோணம்முளைத்தென்றெழுதுங்
கூரத்தாழ்வான்பதக்கோகனகம்வாழி. (கஉரு)

வேறு. திருவரங்கநகரின்வந்தபோதுகண்கடெரிகிலாக்
கிருமிகண்டன்மீளவோடவேகிளர்ந்தநான்மறைப்
பொருள்கலந்தமணவரங்கர்புவியடங்கவிசிறினான்
பெரியநம்பிபிள்ளைபாதமலர்கள்வாழிபெரிதரோ. (கஉசா)

வேறு. தொம்பிளந்தொடிந்தேயெட்டுக்கரிகுலந்திடவென்றோன்சே
யம்பிளையவனைத்தாக்கமருந்துதவனிலராசர்
தம்பிளைக்கயன்வாழ்வீய்வோன்றாளிணையேத்திவாழு
நம்பிளையிருபொற்பாதநளினங்கள்வாழிவாழி. (கஉஎ)

வேறு. உணவாகியவைம்புலநோய்களுமோடவெங்கும்
பணமாயிரப்பஃறலைப்பாந்தளிற்பள்ளிகொள்ளு
மிணையேயின்முராரிபொற்றாளிணையேத்திவாழு
மணவாளனென்னுந்தவமாமுனிவாழிவாழி. (கஉஅ)

வேறு. மாதவவொண்சடகோபன்றமிழாற்செய்த
மறைமொழியாவண்ணமதிற்குடந்தைமாலுக்
கோதியவாராவமுதாம்பத்தைக்கேட்டே
யுயர்குருகூருறங்காதவெகினத்தின்கண்
டொருவச்செந்திருவாய்மாறன்கூறத்
திகழ்திருவாய்மொழியையுலகுய்யத்தந்த
நாதமுனியியலிசையினமம்வல்லோ
னளினமலரிணையடிகள்வாழிவாழி. (கஉகூ)

வேறு. ஓரங்கலாதநாவுடையானுருவிலாதோனெங்கோலின்
வீரங்கலாமலிடைந்துடையவெற்றியுறமுக்கோலுடையா
ஞரங்கலாரங்கமிழ்திருவையகலாவரங்கரடிபிரியாச்
சீரங்கநாராயணமுனிதன்சிறந்தஇணப்பதம்வாழி. (௧௩௦)

வேறு. கராசலமுறவேபிணித்திழுப்பக்கராசலமவணிஞாலமிடச்
சராசனம்வாளம்வளையாழிதண்டுந்தரித்தவன்ருதவித்
துராசையொருவுமுனிவர்தொழத்துலங்குமரங்கர்பதமேத்தும்
பராசரபட்டரிருபாதப்பதுமமலர்கள்வாழியரோ. (௧௩௧)

வேறு. நீதவியாசில்பொன்னித்திரையுலாமருங்கிஞூங்கு
மாதவியாரம்பூகம்வயங்கியவரங்கமேவுஞ்
சோதியைவியாளமீதிற்றுலங்கியைச்சுருதியோதும்
வேதவியாசபட்டர்விளங்கியபதங்கள்வாழி. (௧௩௨)

வேறு. நந்தாடவெங்குங்கயறுள்ளிடநாரம்பொங்க
வந்தாடுமாமதிப்பொய்கையின்மாமறைவாய்த்
தந்தாடியதேத்துமரங்கனைச்சார்ந்துபோற்றுங்
கந்தாடையண்ணன்கமலப்பதம்வாழிவாழி. (௧௩௩)

வேறு. உதிட்டிரன்றனக்கொன்னலன்வஞ்சமிக்
கதுட்டன்மாளக்கவான்றட்டிக்காட்டிய
மதிட்டுவாரகைமன்னடிபோற்றிய
வதிட்டையாயன்மலரடிவாழியே. (௧௩௪)

வேறு. பெருமலையப்பிணிற்பிறழுவேகடை
கருமலையொப்பஞர்கழல்கள்பேணுவார்
மருமலையப்புகீள்வதிட்டையாயஞர்
திருமலர்ப்பாததாளிணைகள்சேருவாம். (௧௩௫)

எயினன்ராமாவெனவெழில்கொள்வைகுந்தத்
தயர்வுறவயங்கியதண்மையாமென்றான்
மயர்வறவெட்டெழுத்தோதுமாந்தர்க
ளியல்புறுபெருமையையியம்பற்பாலதோ. (௧௩௬)

வேறு. நீதிசேர்செல்வம்வாய்க்குநிவந்தமெய்த்தருமநீளு
மேதமின்ஞானமெய்துமிந்திரையினிதுநோக்குஞ்
சேதிபராசனுடைச்செருவென்றுவிதற்பனல்குங்
கோதையையமணந்தமாயோன்சிலைவலிகூறுவோர்க்கே. (௧௩௭)

உன்னியகருமம்வாய்க்குமுயர்மறைநெறியுண்டாகி
மன்னவராகிவாழ்வார்மறுவிலாமக்கட்பேறும்
பொன்னெடுங்குன்றமானப்பொருதவேறேழடர்த்துப்
பின்னையையமணந்தமாயோன்பெருநலம்பேசுவோர்க்கே. (௧௩௮)

வேறு. திருவினுடனவசுந்தரையுநீளையென்னுஞ்
செழுங்கொடியுந்தேவியராய்ச்சிறந்துதோன்றப்
பருமணிமேற்புரள்பணமாயிரங்கள்கோடி
பருதியொளியெழுமரவப்பாயன்மீதே
கருமுகின்மேற்றிகழ்கமலக்காடுபூத்த
கவினுறவால்வளைநேமிகதைவாள்சார்ங்க
மருவவகல்பயோததியின்வயினதேயன்
வலம்வரவாழரியடியெம்மனத்துள்வைப்பாம். (கருக)

வேறு. இதரதேவதைதையைநினைக்கிலாமதியையீய்ந்துநீயானகிலிலங்கு
சுதைதருமொழியார்கலவியிற்படிந்துதூர்த்தனுத்திரிகுவதொழித்துப்
பதமரிச்சித்துச்சரிதையைமறவாமனமளித்தென்பவந்தீர்த்தி
சதுமுகனொடெவ்வுலகுமூர்த்தியினிற்றந்ததிற்றோன்றியதலைவா. (கசo)

வேறு. கன்றெடுத்துவிழுவெறிந்துஞ்சகடுதைத்துங்கரமதனாற்
குன்றெடுத்துமழைதடுத்துங்கலையெடுத்துங்குருந்தமர்ந்து
மென்றினவிர்மறைந்திடவேதிகிரிதனையெடுத்தடைத்து
நின்றுகுழலூதியருணெடியவன்றன்பதநினைப்பாம். (கசக)

வேறு. அன்னைதன்னுதரத்தடைந்துசோடசமாம்வருடமாரழகனுய்த்தரங்க
துன்னுபாற்கடலிற்சோதிபாலகச்சுதனெனுமவாவினால்வியாசன் [ந்
பின்னுறநடந்துவிளித்திடவதத்திற்பிறங்குபாதவங்களொன்னெனவே
தொன்னலனுறவேசெனனபாசத்தைத்துணித்தகன்முனிவனைத்தொழு
[வாம்.

வானநாரியர்நக்கினத்தினராகிவாவிநீர்மருவவொண்வியாச
னீனமில்வசிட்டன்பராசரன்வரத்துசிடையினிற்புனைந்திலச்சித்தே
வேனிலான்விசிகம்விலக்கலாதவர்நீர்விளங்கியசுகன்றனக்கியாமுங்
கானுறுமரமுஞ்சமமெனவுரைப்பக்கடிதகன்முனிவனைத்தொழுவாம்.

வேறு. இருக்குமுதன்மலரயனோடேழுலகமளித்தவிறை
மருக்கொள்குழற்றேவகிதன்மதலையெனவந்தவனித்
திருக்குளதெலாமடியச்சிசுபாலன்றிகைத்தோட
விருக்குமணித்திருவைமணந்துவந்தருள்வான்சரிதைதனை. (கசச)

புகலரியவிறலபிமன்புதல்வனுக்கன்றருள்புரிந்து
சுகன்மொழிபும்வடகலையையான்றமிழாற்றொடுத்ததனின்
மகாநதிபதியலையவரும்விசையைநிகரெனமண்
ணுகுசிறுகூவற்புனலுறுலாவியமண்மேகமொத்து. (கசரு)

வேறு. சுகனவன்பிதாவவன்றந்தைதூய்மையாற்
பகர்கதையரியினம்பருப்பதங்களாற்
சகரநீரடைப்பமெய்தனின்மனற்கொடே
புகுமணிவியல்பெனப்புகலுவேனரோ. (கசசு)

வேறு. திசைசெவிடுபடநெடியசிகாமுடியினமொடிய்
விசைகொடெதிர்வருகெருடனிகரெனவேவிரிகிலன்வாய்
மசகமிருசிறகசையவருசெயலேயொத்தனவா
விசைகொள்சுகனருண்மொழியையான்றமிழாலியம்பியதே. (கசஎ)

சம்பரனைவதைத்துயருந்தசரதராமன்சரிதை
கம்பன்மொழிசெந்தமிழின்கவித்திறத்தின்காட்சிகண்டு
மம்புயங்களலர்ந்தெழுநீரிலஞ்சிதனிலாம்பலுந்த
தும்பியபோலேவாசுதேவகதைசொல்லினுல். (கசஅ)

வேறு. இரைகடலிப்பிராற்றமென்கிலாததனிற்றேன்றுஞ்
சரியில்வெண்டரளநற்றிச்சார்குவார்போலஞானங் [ண்
தெரிகிலென்மொழித்தபுன்சொற்சிறுமையைப்பெருமையாய்க் கொ
டரிதலப்புகழையுள்கிமகிழுவாரறிஞர்மாதோ. (கசகூ)

வேறு. பராசரன்புதல்வன்முதலினோருரைத்தபதினெட்டுப்புராணமாமதனு
ளிராசையையுறுத்தும்புராணமோராறுங்கரில்சாத்திகமெனவுரைப்ப
ரிராசதபுராணத்தியல்பிருமூன்றென்றியம்புவரிதுவுமேயன்றித்
துராசையையளிக்குந்தாமதபுராணஞ்சொல்லுவர்மூவிரண்டெனவே.

காருடம்பதுமம்வராகம்பாகவதங்கவினுறுவிண்டுவின்புராணம்
நாரசிங்கத்தினுடனிவையாறுநலனுறுசாத்திகபுராண
மேருறுமாற்கண்டேயம்பௌடிகம்வாமனமியற்பிரமகைவர்த்தஞ்
சீருறுபிரமாண்டத்துடன்பிரமஞ்சிறந்தவிவ்வாறும்ராசதமே. (கருக)

அந்தமார்மச்சங்கூருமஞ்சைவமாக்கினியங்காந்தத்துடனிலிங்க
மிந்தநூற்புராணமாறுந்தாமதமாமிராசதந்தாமதமிரண்டும் [ஞ்
வந்தெழுஞ்சனனமறுத்துயர்பதத்தைக்கொடாதுசாத்திகமகாபுராண
சுந்தரவரியின்பதத்தினையளிக்குமாதலாற்சுகன்மொழியுரைத்தேன்.

வேறு. எதுகுலத்துவருமிறையோன்சரிதையைநற்சுகனிசையா
லுதவுசொலைத்தமிழினுலுரைத்தவன்வண்டிருவரங்கம்
பதியமர்வேத்திராக்ஷாத்தோன்பழமறையோன்வரதனெல்லிக்
கதிபதியாயுயர்ந்திடுபேரருளாளநாதனரோ. (கருஉ)

வேறு. ஆபுமறையோனெண்ணவருஞ்சகார்த்த
மாயிரத்தநானூற்றேடறுபத்தஞ்சாங்
காயசுபகிருதுதனின்முதன்மாதத்திற்
றுலங்குருவாரத்துத்திராடநாளி
னேயமுடனெல்லிநகர்வரதராச
னிகரிலரங்கத்திலரவணையினெங்கு
நாயகன்முன்னறிஞர்மகிழ்ந்திடவேவாசு
தேவகதையரங்கேற்றினனாற்றுனே. (கருஙு)

குந்திசுதர்தேவியுடன்கொடுங்கானின்மாதவனைச்
சிந்தைசெய்துமுயர்கதியைச்சேர்ந்ததுவுமகபதிசேய்
மைந்தன்மகன்றனக்குவியாசன்குமரன்மால்சரிதை
யந்தமுடனமுதெனவேயருளியதுமறையலுற்றேன். (கருரு)

திருவரங்கப்படலம்-முற்றிற்று.

ஆ இவ்வளவும்பாயிரம்.

ஆ திருவிருத்தம். கசுக

---

## உ-வது—நைமிசாரணியப்படலம்.

வேறு. பூமிசைவனிதைகொழுநனுமுராரிபுவியிடத்தருந்தவரலையத்
திமைசெயசுரர்மடிந்திடவிடுப்பத்தெசசதகோடிசூரியர்போ
னேமிவந்தவனாவதைத்தவண்விழவேநிகரிலாநைமிசாரணிய
நாமமுற்றிடவேயிலங்குமாச்சிரமத்தனேகமாமுனிவர்நண்ணினரால்.

சவுனகன்முதலாமருந்தவரெல்லாஞ்சத்திரயாகத்தைமுயன்று
சிவனயனெடுமாலிவர்மகிழ்ந்திடவேதெசசதவருடமுநிறைய
வவிசொரிந்தழலின்மறைச்சொலைநிரப்புமவர்முனேசூதன்வந்தணுகக்
கவினுறுதவிசினிருத்தியாச்சரியத்துடனிவைகழறினரன்றே. (உ)

அயனிகர்வியாசனருளியபுராணமனைத்துக்கும்பாத்திரமாகு
மியல்புறுமறிஞர்மகிழ்ந்திடச்செவிகட்கினியநல்லமுதெனவிசையாற்
செயலுறுசரிதைப்பொருளினையெவருந்தெளிவுறப்பகருமாபுருட
சயமுறுஞானம்வழங்கிடுங்காதையருளெனச்சவுனகன்மொழிவான்.

கனமுறுதடத்தின்செயலெனச்சனனமரணமுங்காட்டுமிக்குரம்பை
தனினமர்சீவனரகினுஞ்சுவர்க்கமதனிலுமமர்ந்துபின்புவியின்
சினமுறுவிலங்குபறவைகள்கிருமிநருமாய்ச்செனித்திடாதுயர்ந்த
வனகன்வாழ்பதத்தினமைத்திடுஞ்சரிதையருளெனச்சவுனகனறைந்தான்.

சிவனெனவிளங்குஞ்சவுனகமுனிவன்சிறந்திடவுரைத்தசொற்கேளாத், தவர்களெண்சூதனறைகுவானிகரில்சத்தியவதிதருதனையன், கவினுறவருள்பாகவதம்வாளபிமன்காதலன்போசனாகிப், பவமிலாச்சுகன்றன்மொழிந்திடக்கேட்டபுராணத்தைப்பறைகுவனென்றான். (ரு)

சூதனீதறையச்சவுனகனறைவன்றூயனாகியசுகமுனிவன்
பூதலத்தமரின்மடிந்தவாளபிமன்புதல்வன்பாலேதுகாரணத்தான்
மாதவருறவேநிகரில்பாகவதமகாபுராணத்தினைமொழிந்தான்
நீதகல்வியாசன்பயிற்றியவுணாவெனறேதிடவனிவைசெப்பும். (சு)

தரங்கநற்சரசுவதிநதிக்கரையிற்சம்மியப்பிராசவாச்சிரமத்
தரங்கடையயம்போலவனியிற்சனங்களருவினையகலவேவியாசன்
புரங்களைபுநிதன்மகிழ்ந்திடநாலுபெயரதாய்மறையினைப்புகன்று
கருங்கடலுடனேழுதிருமூலகிற்கவினுறுபாரதம்பகர்ந்தான். (௭)

மஃறயறைவியாதனிருக்குவேதத்தைமறுவிலாப்பயனிலங்கறைய
நெறியுறுவைசம்பாயனமுனிவனிகரிலாவெசுருவைநிகழ்த்த
வறிவுறுசெயன்சாமத்தினைமொழியவதருவவாரணஞ்சுமந்து
பறையவேரோமகருடணனிகரில்பாரதம்பகர்ந்திடப்பணித்தான். (௮)

பயிலமாமுனிவன்பழுதிலாவைசம்பாயனர்செயமுனிபாரிற்
செயலுறச்சுமந்துமறைகளுன்கிளையுந்தெளிவுறவந்தணர்க்கறைந்தார்
கயலுறுகடல்சூழ்காசினியமர்ந்தோர்கவினுறுபாரதப்பொருளை
யறியவேரோமகருடனச்சூதனறைந்தனனுலகெலாந்தழைப்ப. (௯)

சத்தியவதிசேய்சதுமறையைத்தானறைந்துபாரதத்தினைமொழிந்தும்
புத்தியின்மலமாகாமையான்மலினம்பொருந்தவே மெய்யெலாமெலிந்
சித்தம்வேருகியுழலும்வேலையின்வாய்சிறந்திடுமாதவமுனிவ [னு
னத்துறுநதிவாய்பராசரன்குமரனண்ணுமாச்சிரமத்தையடைந்தான்.

வீணையுங்குடையுஞ்சிரகமுந்தண்டும்விளங்கிடநாரதபகவான்
வாணனாயிரந்தோடுணித்தவன்புகழைத்துதித்தவன்வருதலும்வியாசன்
பாணியாற்றொழுதுசிரசினாலிறைஞ்சிப்பரிவுடனாசனத்திருத்தி
வேணியார்விமலனிகர்தவன்முனரினிருந்திடச்சுரர்முனிவிளம்பும்.

வேதநான்கினையுமுலகெலாந்தழைப்பவிரித்தனைபாரதவிசையைச்
சூதன்யாவருக்குமறைந்திடப்பணித்தாயாகிலுந்தூயயோகியர்தந்
நாதனமுராரிசரிதையைப்பரிவானவின்றிடாப்பாவம்வந்துறவே
யோதியுமுணர்ந்துமனதுநின்மலமாகாமனீயுழந்தனையென்றான். (௧௨)

இவையெலாமொழிந்தயாழ்முனியடியினிறைஞ்சியேபராசரன்குமர
னவையறுமறைநான்கினையுநானவின்றுநலனுறுபாரதம்பகர்ந்தும்
மறுவுறுமனதுகலங்கமெய்ஞ்ஞானம்வளருதலிலாமலேகுறைவா
யறிவறலானிவ்வினையினையகலவருளுநீயருளுதியென்றான். (௧௩)

நிகரிலாமுனிவனிவைநிகழ்த்திடலுநெறியுறுநாரதனனங்கள்
பகிரதியயத்தைப்பருகவேகரடம்பழுதுறவச்சலம்பருகா
திகழ்வுறுகிருமியினைத்தகட்டத்தினிழுக்குநீரருந்துவபோன்று
ககயதிதுவசன்புகழைமெய்யறிஞர்கழறநீயிதரநூல்பகர்ந்தாய். (௧௪)

கன்மகாண்டத்தைநிறைத்தவனொளிறுங்கவினுறுதிருமகள்பதியா
நின்மலன்புகழைநினைக்கிலாதவர்களிரயத்தினுறுவர்வேதத்தி
னன்மையையுணராதறநெறிநிறம்புநவையுறுமனத்தினரொளிறு
மன்மதன்றந்தையடியடைந்தவர்கண்மருளறவுயர்பதத்தமர்வார். (௧௫)

காசினியதனிற்றவஞ்செய்வார்யோகக்கழறிடலியமநியம
மாசனம்பிராணுபாமஙற்பிரத்திகாரதாரணமருட்டியான
மேசகல்சமாதியிவையெட்டுமுணர்ந்தோரொன்னினுமுராரியொண்புகழின்
வாசனையிலாதோர்சொற்கமெய்திடினுஞ்சென்னமாம்வாரியின்வீழ்வார்.

ஆவலையகற்றியவனியிற்றீர்த்தயாத்திரைமருவுவோர்பெரியோர்
சேவைசெய்திடுவோரவர்களான்முராரிசரிதையைத்தினந்தொறுங்கேட்
பாவமாமளப்பில்பரவையைக்கடப்பார்பதுமநாபன்னவரிதயத் [டே
தோவுதலிலாமலிலங்குவனவவையுவப்பொடுந்தன்பதத்துய்த்தே. (கஎ)

படியினில்வயங்கும்பாதவஞ்சடையப்பாவகன்றுலங்குமாறெனமா
லடிநினைந்தவர்பிற்குணமிரண்டகற்றியறனுறமுற்குணத்தாள்வர்
சடமகற்றியசாத்திககுணத்திறைவன்சங்குசக்கரந்தரித்தவனே
வடிவுடைமலராண்மகுணனுங்கவர்கள்வைகுந்தம்பெறவருள்செய்வான்,

மறைமகம்யோகங்கிரியைமெய்ஞ்ஞானமறுவிலாத்தத்துவதன்ம
நெறியுறுகதிஷமிவையெலாமுராரிபெயருறநிறுத்திறனலனு
மறனறவிதரதெய்வத்தையடையினிவையெலாமதனமமாயளக்க
ருறுமுயர்கலங்காலடைந்திடவுடைந்தேயழிவபோற்பருவாறுறுவார்.

ஆதலின்முனிவனவனியிற்சோகமோகவெம்பவங்களையகற்றுஞ்
சீதரநெடுமாலமிர்தநாமங்கடிறமெனவுணருதியான்முன்
ருதிபுத்திரனுய்ப்பரமபாகவதவெதிகளாற்றத்துவமறிந்தேன்
மாதவனடியானெனமகிழ்வுற்றேன்மற்றவைகேளெனமொழிவான். (உ0)

சுரர்முனியெனுநான்பூருவசெனனத்துலங்குகெந்தருவனுய்த்தோன்றி
யுருபெருங்கண்ணனெனும்பெயராகியுருவிறலதிகனுமாகி
யருவையரிடத்தினதிகமோகனுமாயமர்ந்திடுமெனைத்தெசப்பிரம
ருமறையவர்சேர்மகத்தினிற்கானமிசைக்கநீவருகெனவறைந்தார். (உக)

தீதினையகற்றியுயர்தெசப்பிரமர்மொழியினுற்றேவியருடனு
மேதமுற்றிடானவர்செயுமகத்தினிடையிற்பாடவத்தொடுமெய்த
மாதர்களுடனீஆர்த்தனுயிவணின்வந்தனையாதலினிழிவாந்
தாதிபுத்திரனுய்ச்சனித்திடுகெனவெந்தழலுறச்சபித்தனரன்றே, (உஉ)

சாபமுற்றியான்றயங்குகெந்தருவனுகியசெனனத்தையொருவிப்
பாபமுற்றிடவாண்டுறையுமோர்மறையோன்படைத்திடுந்தாதிபுத்திரனுய்
கோபமுற்றிடுநற்குணமுடையவனுய்ப்பிறந்தைந்துபருவங்கூடிடமா [க்
னுபியிற்றிகழ்வோன்றனையிகமாதிகனுல்வர்வந்தவ்விடத்துற்றூர். (உங)

ஏதமிலெதிகள்வருதலுமறையோனெதிரெழுந்தவர்களையிறைஞ்சி
யாதரவுடன்றன்மனைதனிற்கொணர்ந்தேயருக்கியமளித்தபின்பரிவாற்
ருதிபுத்திரனுமெனையவர்க்கேவல்செயும்படிசாற்றியேவிடுப்ப
மாதவமுறயானவர்களேவினசொன்மருமலாண்டுழியஞ்செய்தேன்.

தாதிபுத்திரனாய்த்திரியுமென்றவத்தாற்சாதுமாதத்திடையெய்து
மேதமிலெதிகள்வரமனைமெழுகியேவியதொழிலெலாங்கேட்ப
நீதியார்தவத்தோர்நதியினிற்படிந்துநியமமுற்றியபினர்ச்சமைத்த
வோதனமருந்திமிகுந்திடுமிலையினுச்சிட்டமளிக்கயானுகந்தேன். (உரு)

மாதவமுறயானெதிகளுச்சிட்டம்வழங்கிடவருந்தவென்மநத்தி
னேதமற்றுயருமறிவுவந்துறமாதவன்கதையவரியம்பிடும்போ
தாதரவுடனுமகிழ்ந்தியானேற்பவதுவெலாம்விரித்தெனக்கறையக் [றே.
கோதின்மெய்ஞ்ஞானம்படர்ந்திடயானோர்கொள்கொம்பாயுணர்ந்தனனன்

வேதமோதிகண்மறையவன்மனையினீரிருதிங்கண்மேவியபின்
போதலுமவரைத்தொடர்ந்துதானேகப்பொறையுடையவரெனைமகிழ்ந்து
தாதிபுத்திரனென்றிகழ்ந்திடாதெனக்குத்தத்துவஞானத்தைமொழிய
வாதரவுடனுங்கவர்களையிறைஞ்சியகத்தினிற்றிரும்பிவந்தனனால். (உஎ)

தூயயோகியர்களறைந்ததத்துவத்தாற்றுலங்கியவிருத்தியுண்டாயுந்
தாயினையொருவமனதிலாததனாற்றவஞ்செயுங்கருத்தினையறியே
னேயமோடவளோடுறையுநாளவளைநெறியுறுமறையவனோக்கிப்
பாய்புனிற்றுக்கண்மாவநத்திடைபோய்ப்பால்கறந்தெடுத்துவாவென்றான்.

மறையவன்மொழியால்வநத்தினாவினங்கள்கறந்திடவல்லையிற்செல்லு
நெறியிடையரவுகடித்திடவவளுமிறந்திடநேமியோனருளா
லறிவுவந்தனனவளைமடிந்தமைதானலனெனநினைந்தவணொருவிக்
கறையடியுழுவையிருளிகோளரிகள்கரடிசேர்கானிடையடைந்தேன். (உகூ)

மனிதர்களணுகாவரையுறும்வநத்தின்வல்லையினெய்தியான்றிரியத்
தினகரன்வெயிலாற்பசியுறவவனோர்கயத்தினிற்சலத்தினைப்பருகித்
தனியரசருகினிருந்தரிதியானந்தளர்விலாமற்கருதிடவென்
மனதின்மலமாயுறப்பரஞ்சோதிவந்துமுன்னின்றவண்மறைந்தான்.

இருவிழிகளிப்பத்திருமகள்கொழுநனென்முனிற்றோன்றியேமறையத்
துணைவரத்திசைகளொருங்குறத்திரிந்துதயானுவாமுராரியைக்காணப்
பருவராலுறயான்பருவமோரைந்தாஞ்சிறுவனாதலிற்பரிந்திரங்கி
யரியுயர்விசும்பினடைந்தசரீரியாகியேயிவையறைந்தனனால். (ஙக)

தாதிபுத்திரனாயெழுந்தவிச்சென்னந்தன்னினீயொப்பிலாதுயரு
மாதியாமெனைத்தானடைவதற்கரிதேயாதலாலிவ்வுடலகற்றி
யோதுதற்கரியவழிவிலாச்சரீரமுற்றெனையடைதிசின்னாளிற்
பீதியுற்றிரங்கேலெனவருள்செய்யப்பிரான்றனைச்சேவித்தவணிருந்தேன்.

வருடமோர்சதுரயுகஞ்சகசிரமாய்வரமலரயற்கிரவாகக்
கருடவாகனன்றன்னருளினிலிழிவாமுடலினைக்கழித்துத்திவ்வியமாம்
புருடனாய்ப்பிரமன்றுயில்கொளமனையிற்புகுதும்போதவன்வயிற்றுற்றே
யிருடருபொழுதாருகமலுங்காறுமிலங்கியாண்டிருந்தனனன்றே. (ஙங)

சதுமுகனிரவிற்சகசிரசதுரயுகமொருப்படத்துறைவானத்
துதிகமாயெழுந்தவவாந்தரவெள்ளமகன்றிடவவன்றுயிலுறப்ப
வுதையமாகியபோதவன்மடிதன்னினுதித்துநாரதனெனும்பெயராய்க்
கதிதருமுராரிக்கடியனாயினனலறிதிமாமுனியெனக்கழறும். (௰௪)

தாதிபுத்திரனுமிழிவினிற்பிறந்துஞ்சங்கொடுசக்கரந்தரித்த
வாதிதன்சரிதையருந்தவரறையவழியுடன்கேட்டமாபலத்தான்
மாதவர்துதிப்பவயன்வயிற்றொன்றிவயங்கினேன்மாலடியவனு
யாதலின்வியாசமுனிவநாரணநற்சரிதையையறையெனப்பறைவான்

நற்றிலாதிருக்கத்தொடர்ந்துதீவினைதா
னலியுமாறெனப்பலவுயிர்க்கு
முற்றநல்வினையால்விபவமுற்றாழ்ந்த
நிலனுறமுடுகுநீரெனவே
பற்றுமாலார்க்குமுயலவேண்டுவதிப்
பரமநற்சரிதையைப்பரிவாற்
கற்றுணர்ந்துரைப்பதுலகிற்றுல்லபமா
மவையினைக்கழறுகென்றிசைப்பான். (௰௬)

அரிபெயர்நிறையவயங்குபாகவதமச்சுதனயன்றனக்கறைய
விரைமலருறுவோன்யான்செய்மாதவத்தால்விளம்பினனதனைவிரித்தே
யிருவினையகலச்சனனநோய்நிரையவிருளறவிருதயத்திலங்கித்
திருவினயகன்வந்துறப்பரனடியார்களிப்பநீசெப்பெனவறைவான். (௰௭)

வேதநான்கினையும்விரித்ததன்பொருளைய்முமிதாயுணர்ந்துகேசவனே
யாதிமற்றவனையலாததெய்வங்களிறையலவீதுசத்தியநா
னோதினேனெனவேமொழிந்தநீயிதரநூல்களையுரைக்கிலையுயர்ந்த
யாதவக்குலக்கோன்சரிதையையியம்பென்றியாழ்முனிவிசம்பினேகினனால்

இவையெலாமொழிந்தேயாழ்முனிவிசும்பினேகலும்வியாசமாமுனிவ
னவையறப்புலனைவிளக்கியேகாந்தசித்தனாய்நாரணன்பெயரிற்
சுவையுறவுயர்ந்ததுவாதசாக்கரத்தைத்துலங்கிடத்தன்மனத்தமைப்பப்
பவமகற்றிடவேபரமன்முன்றோன்றிப்பாகவதந்தனைப்பகர்ந்தான். (௰௯)

நிகரிலாவியாசன்பதினெண்ணாயிரமாய்நிறைந்திடுசுலோகபாகவதஞ்
சுகமுனிக்குரைப்பவவனருள்சுரந்துதூயவாளபிமன்மைந்தனுக்குப்
பகிரதிக்கரைமேலெழுதினமதனிற்பயோத்தியமிர்தெனப்பகர்ந்தான்
சகலசாஸ்திரவேதத்தமர்பொருளைச்சவுனககேளெனமொழிவான். (௨௦)

அரவுயர்த்துவசன்மடிந்திடத்தருமனறனுறத்திரிதராட்டிரனு
நிருபன்மாமகுடங்கவிழ்த்திடத்தாணுண்டிளவரசியற்றியேநிகரி
லருமறைமுனிவர்மகிழ்ந்திடச்செங்கோலவிருறவமர்ந்திடுநாளிற்
றரையினுயர்ந்தசதாகதிதனையன்சார்ந்தனனுடனிவைபகர்வான். (௨௧)

இடரொமக்குறவஞ்சகம்பலவிபற்றியிணையிலாத்துரோபதி துகிலைக்
கடைகயிறெனவன்றுரிந்தெமைவநத்திற்கடியனுய்த்தரத்துநின்மதலை
படிபடுத்திடுமென்புயமிதுவெனுஞ்சொற்பகர்ந்தவனறிவுறுகுருட
முடிகவித்திவணிருத்தியோவெனவேமொழிந்திடவவனுளைந்தனனால்.

தினமுநற்பவனன்றிருமகன்றனித்தவிடமறிந்திவையினைச்செப்ப
மனமெலிந்துளையுந்திரிதராட்டிரன்முன்மறனிலாத்தருமன்வந்திறைஞ்சி
யினியனபலவுமியம்பவுமிடருற்றிருந்திடுமூத்ததாதையினைத்
தனையனாகினைந்தோவருந்தினையெனமன்சாற்றிடவவனிவைமொழிவான்.

விறலுடைப்பவனன்மதலைவந்துளையவிளம்பியவெள்கலையறையா
னறனருள்சுதனையவனியிலமர்செய்தாருயிரிழந்திடுமென்றன்
சிறுவர்கட்கிவணின்பரிவுடனுதகக்கிரிசையான்செய்திடத்தனங்க
ணிறைவுறக்கொடுக்கினலனெனநவிலகிரிலானீவனென்றகன்றான். (௪௮)

அனுசர்கட்கிவையையறனருள்குமரனறைந்திடக்கேட்டிடும்வீமன்
சினமுறவிறந்தோர்தமக்கவர்பெறுஞ்செய்திலமயமளிக்குவதன்றித்
தனையர்கடமக்குப்பிதாநடத்துவதுதருமமன்றெனக்குறித்தாகுங்
கனகமோடெவையுங்கொடேனெனப்பகுந்துகொடுத்தனன்கவினுறுதருமன்

அறனுருதருமன்பரிசனன்புதல்வன்றனக்கவன்சொம்மெலாமளித்து
நெறிநிறைந்திடுநால்வருக்குறுகனகங்கலன்களுநிறைத்திடமகிழ்ந்து
திரிதராட்டிரன்றன்சிறுவருக்கன்பாற்றிலமயமளித்தபின்பிண்டம்
நிறைவுறவுதவிமறையவர்க்கொருங்குநிதியெலாமீய்ந்தனனன்றே. (௪௯)

சிறுவர்கட்குதககிரிசைமந்திரத்தாற்செய்திடுந்திரிதராட்டிரன்பாற்
குறைமிடற்றரன்போற்கனன்றுகான்மதலைகடுகிவந்துருமெனவதிர்த்து
மறமிலாத்தருமன்றனத்தையிவ்வினையால்வவ்வியேவறுமையைக்கொடுத்தி
யுறவுபோற்பகைதிர்குருடவுன்வயிறுவளர்த்திவணுறுதியோவென்றான்.

தினமுமுன்மொழியைப்பவனனற்குமரன்செப்பிடவுளைந்திடுமந்த
மனன்முனர்த்தருமன்வந்துநல்லுரையைவழங்கவுமவனுயிருக்க
நினைவுவேறுகியிடருறவறன்சேய்நிகரிலாவுணக்கியான்செய்தீ
வினையெதுவென்னச்சமீரணன்புதல்வன்விளம்பியவீதெலாம்விரித்தான்.

அறனறவியற்றுஞ்சுயோதனன்றனையான்பயந்திடுமதிகபாவத்தால்
விறலுறும்பவனன்சுதனிகழ்ச்சியினைவிளம்பிடத்தருமயான்வநத்தி
னுறுவனென்றறைந்தங்குதிட்டிரன்றடுத்துப்பலபலவுரைக்கினுமிராது
நெறியுறும்விதுரன்றுயர்கொள்காந்தாரியிவரொடுநகரைநீங்கினனால்.

கந்தமார்கடத்தினயனமில்லவன்றன்கடிதினிவரொடுமேக
மைந்தர்கடுத்தங்கிரங்கவுமறுத்துமதியினின்ஞானம்வந்தெழநற்
குந்திதன்கொழுனன்றமையனைவணங்கிக்கூடவேசென்றிடநிகரி
லந்தணர்திலகமாயசஞ்சயனுமனுகினனவனொடுமன்பால். (௫௦)

தருமனாண்டிரங்கித்தந்தைதன்மூத்தோன்சார்ந்திடுவனத்திடைநகரி
யிரணியமிலங்கவுயருமண்டபங்களெழிலுறுமாளிகைபலவும்
விரைவினிலமைக்கவதனிடையவருமேவியாண்டனேகநாளிருப்ப
வரசர்களுடனேயறனசுதன்றினமுமவ்விடத்தடைந்துமீடினத்தின். (ருக)

தவமுயல்பவர்களிரணியமிலங்குஞ்சரியின்மாளிகையினிற்சார்த
னவையுறுமெனவங்குதிட்டிரன்வருமுன்னூல்வருஞ்சஞ்சயனுடனும்
பவமறவெவருமணுகுதற்கரியபழுவத்தினடைந்தமர்தினத்தி
லுவமையில்விதுரனிவர்களையொருவிப்பலமிருகங்களோடுறைந்தான்.

விரைவினிற்றருமனிவரமர்வனத்தின்மேவியாண்டிவர்களைக்காணான்
பருவரலுறவேபலவியோசனைகளந்தப்பழுவத்தினெய்தி
யரியமாதவஞ்செய்யரசனோடனைவரடியினிறைஞ்சியபின்னர்
சரியிலாவிதுரனிரலைமானினத்தோடுறைந்திடக்கண்டவன்சார்ந்தான்.

இரலையினினத்தோடமர்ந்திடுவிதுரன்றமையன்றனையருள்சுதனிறைஞ்சி
யுரைபலமொழியவதற்கவனெவையும்விளம்பிடாதோடலுந்தருமன்
றரையினிற்காலாற்றொடர்ந்திடவவனோர்தழைந்தபாதவத்தினிற்கோட்டை
யிருகையாற்பிடித்தாண்டுயரும்யோகத்தாலிமைப்பினிற்சீவனைக்கழித்தான்

உயரும்யோகத்தாலொழித்திடும்விதுரனாவியேயொளியதாயெழுந்து
தயவுடைத்தருமன்றனாவிடைப்புகுதவிறந்தவன்றனைத்தழல்வளர்த்தி
யியல்புறுமுனிவர்க்கிவையுரைத்திடநீரிருவருமியமன்றனுருவாஞ்
செயலினான்மடிந்தோன்சிவனின்னிடத்திற்சேர்ந்தனனென்றுரைத்தனரன்றே

தவர்களீதுரைப்பவவர்களையிறைஞ்சிச்சமன்சுதன்மூத்ததாதையினை
யவனியினயனம்புனனிறைந்திடவேவணங்கலுமவன்விடைகொடுப்ப
வுவமையினகரியடைந்துசெங்கோலையோச்சிமாமறையவர்மகிழப்
பவமறவறங்களுயர்ந்திடவியலும்படியினையாளுநாடன்னின். (ருசா)

கரியுறுவனத்திற்கண்ணிலாவரசன்காய்கனிகந்தமுமருந்திச்
சரியிலாமதியிற்றயங்குமக்கினியகோத்திரஞ்சந்ததநடத்து
முரனிலாமையினாலாற்றுமசமாரோபணம்பணவுயர்ந்திடுந்தழலை
விரவினவ்வனத்தினிகரில்காந்தாரிவிடுப்பவவ்வழல்பரந்தெழுந்த. (ருஎ)

எரிபரந்தகன்றவனத்திடைப்புலர்ந்தவிந்தனப்புல்லிடையெழுந்து
விரைவினிலவரைவளைந்திடவரசன்விளம்புவனாரணுமவர்க
டரையினிவ்வழலின்மடிவதுபவமென்றறைந்திடச்சஞ்சயன்கடுகி
வரையினெய்திடநற்குந்திகாந்தாரியுடன்மன்னன்றழலிடைமடிந்தான்

வனமுறுமெரியாலவர்மடிந்திடலுமாதவரவணிடையெய்தி
யனலிடையிறந்தோரத்தியையெடுத்தேயத்தினபுரத்தினிற்றருமன்
முனரடைந்ததனைவைத்திவையெலவையுமொழிந்திடவனுசரோடரற்றிக்
கனலிடைமடிந்தவவரெலும்பதனைக்கங்கையினயமுறவிடுத்தான்.

தீயினாலுயிர்போங்குந்திகாந்தாரிதிரிதராட்டிரனிவர்தமக்குத்
தூயனாந்தருமன்சார்ந்தியதனிற்றேய்ந்தயக்கிரிசைமந்திரத்தா
னேயம்வீறிடத்தானடத்தியங்கத்திப்பதியிடைநிவர்ந்திடுதிருந்தி
லாயிரநயனன்சுதனெனும்விசயனளக்கர்சூழ்துவரையிற்சென்றான்.

துவரையினடைந்தவிசயனப்பதியைச்சூழ்ந்துசாகரமழித்திடலு
மவனியினரசர்மடிந்திடத்திருமாலழிவில்வைகுந்தத்தினெய்தத்
தவர்மகிழ்ந்திடமாமதுரையினிலங்கவச்சிரன்றனைமுடிகவித்துப்
பவமுறுதருமனடியினினிறைஞ்சிப்பருவரலுடனிவைபகர்வான். (௬௧)

துரையினினெனுவின்குலத்துளார்முனிவர்சாபத்தின்மடிந்திடப்பரம
னிரதமீதிலங்கியெழில்கொள்வைகுந்தத்தெய்தினனென்றுபற்குணன்றா
னுரைசெயத்தருமன்படியின்வீழ்ந்தாற்றிலோகநாயகன்றனைப்பிரிந்திவ்
வரசினைநற்றியமர்கிலேன்றவத்தினடைவனென்றமைந்திடும்வேலை. (௬௨)

விலையுறக்கொடுத்துக்கொளுமனையதனின்வீழுமியநிதியினைக்கண்டே
யிலகியமறையோன்றனக்குமுன்விற்றேன்றனையினாகொள்கெனவவன்றான்
றலமுறுதனமுமுனக்குறுமெனவேதருமன்முன்னிருவருமெய்தி
நலனுறுமிவையைநவின்றிடவரசனேவாதீர்ப்பனென்றறைந்தான். (௬௩)

அரசனீதுரைப்பவிருவருமகன்றங்
கற்றைநாளொருவிடவுயருந்
தருமன்முன்னணுகிமனைகொளுமவனித்
தனமெனக்கெனத்தலம்விற்றா
னிருநிதியவனிற்கண்டெடுத்தமையா
லெனக்கெனவியம்பிடக்கேட்டு
நிருபர்கோன்மிகவுநகைத்துமாதவரை
நோக்கியேநிகழ்த்தலுற்றனனால். (௬௪)

றென்னலித்தனத்தைச்சுவைபடுமோடு
நிகரெனவிகழ்ந்தவரின்றென்
முன்னரினிதனைவிரும்பியேவழக்கு
மொழிந்தனர்முறைமையைநடத்தி
யின்னலைக்கடிந்தான்யானுமிந்நிதியைக்
கவர்ந்திடவிச்சையாயினனாந்
துன்னுதிவினையையறுத்திடுந்தவத்தீ
ரிவைதெரிந்திடச்சொலுமென்றான். (௬௫)

நலனுறுமரசனிவைநவின்றிடலுமற்றவரவன்றனைநோக்கிப்
புலனுறுகிருபதுவாபரயுகந்தான்போயறன்மெய்நெறியழிக்குங்
கலியடருகமின்றாகையினாலேகருத்தினைற்றன்மதியெவர்க்கு
நிலையுறவருமெனமனநடுங்கியனுசரோடிவைநிகழ்த்தினனால். (௬௬)

உலகநாயகனுயெமக்கிடர்களைந்தவுத்தமன்வைகுந்தத்தற்றுன்
கலியுகம்புகுந்ததினிநிலனுளுங்கருத்திலேன்கேடிலாத்திருமான்
மலரடியடையவாத்திடைப்போவனெனவவர்யாமும்வந்திடுவேம்
புலனுறுமரசவெனப்புகன்றிடலும்புரவலன்மகிழ்ந்தனனம்மா. (கூஎ)

தரையையாண்டிடவாண்டுயர்பரிச்சித்துசிரசின்மேற்சுடிகையைச்சாற்றி
யிருநிதியாவுமிருபிறப்பாளர்க்கீய்ந்துதன்னனுசர்களுடனும்
விரைவினிற்செல்லுநெறியினில்லாமலிராதுதான்மேவிடும்படியே
யருமறைநெறியான்மகாபதவிரதஞ்சங்கற்பஞ்செய்தகன்றனரால். (கூஅ)

அனுசர்களுடனுமகாபதவிரதஞ்சங்கற்பமடைந்திடுந்தருமன்
றுனியகன்றுயருமிளைஞர்கள்சூழத்துரோபதியுடன்வநத்தேக
வினையறுமறலிதானுமோர்சுவாநுய்விளங்கியவாலினைக்குழைத்தே
தனைநிகரிலாதநிருபர்களுடனேதரையிடத்தேகியதம்மா. (கூகூ)

தரையினிலளப்பில்வரைகளுநதியுந்தடாகமும்வாவியுங்காவுங்
கரியரியிரலையுழைமரைகரடியுமுழைவசாகாமிருகங்கள்
கிரியினங்கவரிவிடமுமிழரவுங்கிளர்ந்தெழும்பழுவங்களொருங்கு
விரைவினிகழ்ந்தமுனிவர்சாபத்தான்மெலிகுவாரிடரொலாந்தவிர்த்தார்.

அரியினைமநத்தின்வழுத்தியங்கெங்குமவனியினிராமணில்லாமல்
விரைவினினனேகந்தினமொருவிடவேமேவிடவிதிவழியதனு
லூரனறமிலத்திற்றுரோபதிமடிந்தாளதற்பினரொளிகொள்சாதேவன்
றரையினிறந்தானதற்பினர்நகுலனுயிர்விடத்தனஞ்செயன்மரித்தான்.

தூயபாஞ்சாலிசுசிகொள்சாதேவன்றுலங்கியநகுலன்மாவிசையன்
சீயமாம்புழைக்கைசித்திரகாயஞ்சேர்வனத்திறந்ததற்பினரின்
வாயுசேய்நிலத்தின்மடிந்திடத்தருமன்மநத்திடர்மலிந்திடக்காத்த
னேயமோடெடுத்துவெரினிடைச்சுமந்துநெறியிடையிரங்கியேகினனால்.

ஆவிபோமனுசன்றனைச்சுமந்தேகுமறன்சுதனுங்கசரீரி
சீவனேகியவிவ்வுடலினிற்பயனென்செத்தபாதவங்கினைத்திடுமோ
காவலவெவையுமுணர்ந்தநீயிடைக்களைந்துமூவுலகமும்படைத்த
தேவனைச்சரணென்றடைதியிச்சவத்தைத்தெசியெனவிடுத்தவன்சென்றுன்

அனுசர்நால்வருங்கற்புடையபாரியும்வீழ்ந்திறந்திடவறனருள்குமரன்
றனியனுய்ச்செலமாநகரினுந்துடங்கித்தரணியிற்சென்றிடுஞ்சுணங்கன்[ந்து
பினரின்வால்குழைத்துத்தொடர்ந்திடவுலப்பில்பிறங்கல்சேர்வனமெலாமிகழ்
வினையறுதிருக்கேதாரமாந்தலத்தின்மேயினன்றருமருபவனே. (எச)

காவலன்றிருக்கேதாரமாந்தலத்தைக்கடந்திடுமூரணிலாதயரத்
தேவர்மாமுனிவர்திரண்டுவானதியின்செலத்துநீராடியொண்டருவின்
பூவின்மாமாரிபொழிந்தவணிலங்குவிமானமேற்போதுதியெனவே
யாவலினெனைவிட்டகல்கிலாச்சுணங்கன்றனைமுனரேற்றுமென்றறைந்தான்

வேறு. எருவைமன்றிருவிருந்தமையியம்பிடக்கடலி
னிருதிவாயினிற்புகுந்தவள்வயிற்றினைநீக்கி
விரைவினுலவுள்குடரொடாசினியிடைமேவிக்
குரைகொள்வேலையைக்கடந்தனனஞ்சனைகுமரன். (கஉக)

எதிரிலங்கைமாதேவதைதன்னையிடறித்து
மதில்வளைந்திடுமிராவணன்கோயிலின்மன்னிச்
சதுரவீதியின்மனைதொறுந்தாவியேதிரிந்து
புதியநல்லமிர்தானபொற்கொடியினைக்காணான். (கஉஉ)

இலங்கைமாநகரெங்கணுந்தேடியுங்காணுக்
கலங்குசிந்தையன்கவினுறுமசோகநற்காவாண்
டிலங்கவெய்துவோனிசைமப்பினிநேகியேகண்டான்
கலங்கிநீர்பொழிந்திடக்கலைநனைந்தசானகியை. (கஉந)

மாசுறும்மணியேயநீடுயர்கொள்மைதுலியை
ஏசறுங்குணமாருதியிறைஞ்சியேயிராம
ஞசறுங்கரவிரலிடையாழியையளிப்பத்
தேசுறுந்திருவாங்கித்தன்சென்னிமீதமைத்தாள். (கஉச)

சிரசின்மீதொளிராழியைச்சேர்த்திடுஞ்சனகி
யிரவியின்னவிர்போன்றகுளாமணியீய
விரைவின்வாங்கியமாருதிவிளம்பிநீள்பொழிலைச்
சுரர்துதித்திடத்துகைத்தனன்றுகளதாயிறவே. (கஉரு)

வேறு. சுராருலகளவாய்த்துலங்குமுத்தியானந்துகள்படவடிகொடுதுகைத்து
வரைநிகர்கவியொன்றடர்ந்ததுவெனக்காப்பவர்கள்சென்றிலங்கைமன்னவ
குரைசெயமுனிந்துபரிகரியுடனேயுலப்பிலாநிருதரைவிடுப்பப் [னுக்
பரவைபோலவர்கள்வளைந்திடக்கண்டுபவனன்சேயெழுந்தமர்செய்தான்.

விக்கிரமத்தாலடர்நிசாசரரைவிலங்கல்போல்விழுந்திடவதைத்துத்
திக்கயமெனவங்கெதிர்ந்தமந்திரிகளெழுவர்சேனுபதியைவர்
கொக்கரித்தயில்வேல்விடுத்திடுஞ்சம்புமாலியோடிவர்களைக்கொன்று
யக்கனைக்குதியால்நிலத்திடையரைத்தந்தகாந்தகனெனத்திரிந்தார்த்தான்.

பரிகரியிரதம்நிருதர்மந்திரிகள்பஞ்சசேனுபதியக்கன், றரையினில்மடியப்புர
ந்தரசித்துச்சரமைந்துவிடுத்துவந்தடர்த்துப், பிரமவத்திரத்தாலுயருமாருதி
தோளுறப்பிணித்திலங்கையாண்மனன்முன், விரைவினின்விடுப்பவவன்முனி
ந்திவன்வால்வெந்திடச்சுடுதிறொன்றுரைத்தான். (கஉஅ)

நிருதர்கோனுரைப்பப்பலரிராக்கதர்கள்நிகரிலாமாருதிகூலத்
தெரியினைக்கொளுத்தச்சனகிசொல்லதனுலிதையமோடென்புகள்குளிரத்
திருமகள்செயலீதென்றுணரனுமன்றெசமுகனகரொலாமெரியத்
சரியிறன்வாலின்மிசையினினெழுந்தழலினையெங்குஞ்வைத்தனனுல்.

சதுரமாரிலங்கைநகரினைக்கூலத்தழலினாலெரித்ததன்பின்னர்
கதுமெனச்சனகியடியினினிறைஞ்சிக்கடலினைக்காலினாற்கடந்து
மதுவனமழித்தங்கதன்முதற்கவிகளுடனிராகவன்றனைவணங்கிச் [ன்.
சுதைதருமொழிநற்சீதையீய்ந்திடுஞ்சூளாமணிகொடுத்தெல்லாஞ்சொன

மாருதிசனகியிருந்தவாறுரைப்பமகிழ்ந்திடுமிராகவனெழுந்து
பாரினிற்கவிகள்பரவைபோல்மிடையப்பருதிசேய்முதலினோர்சூழச்
சேருறவயக்குமிலக்குவனுடனேதென்றிசையளக்கரிற்சேர்ந்து
சேரிலாச்சலதிக்கரையினிற்றானேநிறைந்திடவமர்ந்திடும்வேலை. (கஙக)

வேறு. எரியினினேம்பலூற்றிடுமிலங்கையைச்
சுரர்நகர்வெள்கிடத்துலங்குசெம்பொனால்
நிருதர்கோன்மகிழ்ந்திடநிகரிலாமயன்
விரைவினிற்குயிற்றினன்மணிகள்வில்லிட. (கஙஉ)

மயனியற்றிடவிலங்கிலங்கைமன்னவ
னியல்புறுங்குரங்குவாலெரியவைத்திட
வுயனமற்றிடவவ்வூரழிந்ததென்னினிச்
செயும்விறலேதெனச்சினத்துக்கூறினான். (கஙங)

எரிசினவிராவணனிவைகள்கூறலுஞ்
சுரர்பதிசெயித்திவைசொல்லுவானுயர்
நரரொடுகவிகடன்னுமம்வேரற
விரைவினிற்செற்றிவண்மீள்வனென்றனன். (கஙச)

தாதையோடிவைசுதன்சாற்றவீடணன்
றீதுசொல்லினையெனச்செப்பிமுன்னவன்
பாதமேற்பணிந்துயர்பரமன்றேவியை
யேதமற்றிடவிடுத்துய்யென்றனரோ. (கஙரு)

இனையசொல்லிளையவனியம்பமுன்னவன்
முனிவுடனகல்கெனமுடுக்கவீடணன்
வினையொரீஇநால்வர்மந்திரிகள்மேவிடத்
துனைநிகரிலாதமால்சரணந்தாங்கினான். (கஙசு)

தீமையில்வீடணன்சேர்ந்திறைஞ்சநற்
பூமனைத்தந்தருள்புனிதராமனென்
னாமமுள்ளளவும்நீவாழ்கநாமமார்
மாமதிளிலங்கையைவழங்கினேனென்றான். (கஙஎ)

சிந்துவினலையுறத்திகழிலங்கையைத்
தந்தனனென்றமனடியிற்றாழ்ந்துபின்
னிந்திரன்றனைச்செயித்திலங்குதீயவன்
றந்தையின்வலனெலாஞ்சாற்றினனரோ. (கஙஅ)

நிருதர்கோனுரனெலாம்நிகழ்த்தக்கேட்டமன்
பரவைசூழிலங்கையம்பதியிற்சென்னெறி
தருகுதியெனத்தவஞ்செய்யச்சார்கிலா
வருணன்மேற்சரம்விடவாரிவெந்ததே. (௧௩௯)

பரவைகளேழினும்பகழிபாய்ந்திட
வெரிகனல்மடுத்திடவேங்குநெஞ்சினன்
வருணன்வந்திறைஞ்சிடவாயினூற்கவி
திரையுறமூவரிமேற்சேதுசெய்ததே. (௧௪௦)

கடலிடைச்சேதுவைக்கடந்திலங்கையின்
மிடலுடையிராகவனமரும்வேலையிற்
கடியவனொற்றர்கள்கலந்துவானரர்
வடிவுகொண்டெய்தினார்மறங்கடுஞ்சவே. (௧௪௧)

சாரணர்சுகரிவர்சாரவீடணன்
சோரனென்றிவர்களைப்பற்றச்சோதியோ
னேருறுமிலங்கைதனிளவற்கியந்தமை
கோரராவணனுக்குக்கூறுமென்னவே. (௧௪௨)

கவினுறுமிராகவன்கழறவொற்றர்கள்
பவமுறுமிராவணனடியினிற்பணிந்
தவரியிற்சேதுவையோரிமைப்பின்முன்
கவிகள்கட்டினதெலாங்கனன்றுகூறினார். (௧௪௩)

சேதுவைக்கடந்திவண்சேர்ந்துவிடணற்
கேதமிலிலங்கையையிராமனீய்ந்ததுந்
தூதுவர்குருதிவாயுமிழச்சொல்லவே
தீதுறுதெசமுகன்சினமுற்றானரோ. (௧௪௪)

வேறு. முனிவுடனிருதனெழில்கொள்கோபுரத்தின்முகட்டினிளேறியேயிலங் [க
வனகனுஞ்சுவேதவரையினுச்சியின்மீதமர்ந்திடநோக்கிடுவேலைத்
தினகரன்புதல்வனிமைப்பினிற்சேர்ந்துதெசமுகன்சிரத்தினின்வயங்கும்
கனகமாமவுலிமணியினைக்கவர்ந்துகாகுத்தனடிமிசைத்தாழ்ந்தான். (௧௪௫)

கோலமார்மவுலிமணியினையிழந்துகொடியவனுளைந்திடும்வேலைச்
சீலமாரிராமன்சனகியைவிடுத்துவுய்யெனச்செப்பிவாவெனவே
வாலிகான்முளையைவிடுத்திடவவன்போய்மொழிதலுமற்றவன்மறுப்ப
நீலமாமுகில்போற்கவின்கொளுமிராமனுடனிவைநிகழ்த்தினனம்மா. (௧௪௬)

சனகியைவிடாதுமறுத்திடுமரக்கன்சமரிடையெறிந்திடுமயிலா
லனகனுக்கிளையோனயர்வுறவவனையெடுத்திடுமரக்கனைப்பவனன்
றனையன்வந்திமைப்பிறறடுத்திலக்குவனைத்தடக்கையாலணைத்தவனேக
வினையறுமுனிவர்துதித்திடத்தருவின்மலர்பொழிந்தார்த்தனர்விபுதர். (௧௪௭)

மீளிபோலிரதமிசையினின்வயங்கிவிசிகம்விட்டடரிராவணனைக்
காளமாமுகில்போற்கவினுறுமிராமன்காலினற்சுதன்புயமிலங்கி
நீளும்வார்சிலையிற்கணையினலவன்றன்மகுடம்வில்நிலத்துறவறுத்து
நாளைவாவெனுஞ்சொல்மொழிந்திடவவனும்நாணமுற்றகனகரடைந்தான்.

விறலெலாமழிந்துவெறுங்கரம்நாற்றிமீண்டவன்தனக்குமாலியவா
னறனலதியற்றினிவைவருவனவென்றறைந்திடமகோதரன்முனிந்து
குறைவிலாக்கும்பகருணனைவிடுத்துக்கொடும்பகையழித்தியென்றுரைப்ப
நிறைதுயிறவிரவவன்றனையெழுப்பிநெடுஞ்சமர்பொருதிநீயென்முன்.

நிருதர்கோனுரைப்பநெடுவரைநிகர்த்துநீண்டமர்செய்திடுமரக்கன்
குருதிநீர்பெருகக்கவிக்குலமடையக்கொன்றுசுக்கிரீபனைப்பிணித்து
விரைவினிற்றிரும்புமளவினிலிராமன்விலக்கியாண்டவன்கைகாறுணித்துச்
சிரமுவரியின்கண்வீழ்ந்திடச்சரத்தைநிறைத்திடத்தேவர்களார்த்தார் (கடு௦)

மருத்தனைச்சனகனுகவேவகுத்துமாயமாங்கியற்றிவைதேகி
பெருத்திடுமிடரினயர்ந்திடுமளவிற்பிறங்கலைநிகர்கும்பகருணன்
சிரத்தினையிராமன்துணித்திடுஞ்செயலைச்சென்றிடுந்தூதுவர்மொழிய
வருத்தமுற்றரற்றுமிராவணன்முனிந்துவயங்கதிகாயனைவிடுத்தான். (கடுக)

அந்தகனெனவந்தடர்ந்ததிகாயனத்திரத்தரிகளையழிக்கச்
சுந்தரமிகுத்தவிலக்குவன்சிலையாற்சுடுகணைமழைகளைசொரிந்து
கந்தமாமலரோன்படையினலவன்றன்சிரத்தினைக்கதுமெனத்துணிப்ப
விந்திரன்முதலாயிமையவர்மலர்கள்பொழிந்தனரொழுந்தெழுந்தாடி. (கடுஉ)

பின்னரும்நிகரிலிராவணன்குமரர்பிறங்கல்போலடர்ந்திடுமவரைத்
துன்னியவிருளையொழித்திடுமிரவிசுதன்முதலாயினோர்கரத்தாற்
சின்னபின்னங்களுறத்தடிந்திடலுஞ்சென்றுதூதுவர்சொலவிலங்கை
மன்னவனிரங்கிவலாரியைச்செயித்தமறவனைவிடுத்தனன்மாதோ. (கடுஙு)

அரனயன்வெருவவிராவணிமுனிவோடரிகளைச்செற்றுவான்கரந்தே
யுரகவெம்படையாலிலக்குவனுடன்வானரங்களைப்பிணித்திடவுவணன்
விரைவினரவம்விட்டுவானரங்கள்விளங்கியாண்டெழுந்திடவிபுதர்
தருமலர்சொரிந்துநடித்திடமுனிவர்சதுமுகனொடுந்துதித்தனரால். (கடுச)

இரணியவரைபோலெழுந்துசெல்கலுழனிலகமாவுரகவெம்படையின்
முரணறுஞ்செயலையடைந்திடுந்தூதர்மொழிந்திடவிராவணன்முனிந்து
கருணைபற்றறுங்கரன்மகன்முதலாய்க்கடியவல்லரக்கரையேவத்
தரணியிற்கடல்போலெதிர்ந்திடுமிவரைத்தடிந்திடுமிரவிசேய்முதலோர்.

இரவிசேய்முதலோர்கரத்தினலிமைப்பினெண்ணிலாநிருதர்வீய்ந்திடலு
மரனெனமுனிந்துவருணமாப்படையோடாசுகாத்திரத்தினைவிடுக்குங்
கரன்மகன்சிரத்தைக்கடுங்கணையதனாற்காகுத்தன்களைந்திடக்கண்டு
விரைபுரைகனகத்தருமலர்பொழிந்துவிபுதர்கணடித்தனர்மாதோ. (கடுசு)

*சரன்மகன்முதலாய்நிருதர்கள்மடிந்தசெயலினைத்தூதுவர்கூற
நிருதர்கோன்விடுப்பவிராவணியனிகநிறைந்திடவரவிலக்குவமன்
வரிசிலைவலத்தாலறுபதுவெள்ளத்தரக்கரைவதைத்திடநோக்கிக்
கருகியமனத்தனயன்படைவிடுக்கக்கருதிவானகமிசைவந்தான். (கருஎ)

கருமுகிலிடையவ்விராவணிகரப்பக்கடியனுமகோதரநிருதன்
சுரர்பதிவிபுதர்மனிதர்களுருவாய்த்தோன்றிடவிலக்குவனுடனே
யரியினந்திகைக்குமளவினிலொளித்தவறனிலானயன்படைவிடுப்ப
வெருவிவிண்ணவர்களொருவிடவிளையோன்விழுந்தனன்கவிக்குலமடைய.

விறலுடைநிருதன்விடுத்திடும்படையாற்கவிகளோடிளையவன்விழலும்
நெறியுறுமிராமனடைந்தவணிரங்கிமயங்கிடநிகரிலாச்சாம்ப [னதைச்
னறையமாருதிபோய்ப்பசும்பொனின்வரையைக்கடந்தவுடதப்பருப்பதத்
சிறகுடைக்கலுழனெனக்கொணர்ந்திடலுமுயிர்வரத்தெளிந்தனர்வீரர்.

விரைவினினுமானவுடதவரையைக்கொணர்ந்திடவுயிர்வரும்வீரர்
சுரர்மலர்பொழியவயங்கினரெனுஞ்சொற்றூதர்சென்றறைந்திடவரக்கன்
எரிசினமுறத்தன்சுதன்றனைநோக்கியினிச்செய்வதேதெனமாயக்
கருமமங்கியற்றிநிகும்பலைமுடித்துக்களைவனந்நரரையென்றுரைத்தான்.

தீயவனிவையையிராவணன்றனக்குச்செப்பிமாவவுடதவரையை
யேயெனுமளவினவணிடையிருத்தியெய்தியமாருதிமுனரின்
மாயமைதுலியாயரற்றிடத்துணித்துவனப்புறமயோத்திமாநகரிற்
போயதினுறுவோர்கிளையுடன்பொன்றப்பொருவனென்றேகினனம்மா.

தீயவன்வதைக்கச்சனகிமாண்டனளென்றிராமன்முன்மாருதிசெப்ப
வாயிரம்பெயரோனயர்ந்திடுமளவிலறிஞனும்வீடணனவணிற்
போயுயர்சனகன்புத்திரிதனைக்கண்டவையெலாம்புகன்றிடமகிழ்ந்து
மாயவாளரக்கனிகும்பலைமகத்தைச்சிதைத்தனன்சுமித்திரைமதலை. (க௬உ)

வடதருநிழலிற்செயுநிகும்பலையாமகத்தினையழித்திடக்கனன்று
கடியவனயன்மாலரன்படைவிடுப்பக்களைந்திடுமிராகவற்கிளையான்
படிமிசையவன்றன்கரமொடுசிலையும்படிந்திடத்துணித்தவன்சிரத்தை
நெடியவெங்கணையாலறுத்தனனமரர்நிறைமலர்பொழிந்தெழுந்தாட.(க௬௩)

புரந்தரசெயித்துமடிந்திடத்தூதருரைத்திடவிலங்கையாண்மன்ன
னரந்தையுற்றரற்றியமர்க்களத்திடையினடைந்துதன்சிறுவனுக்கையினைக்
கருந்தடங்கரத்தாலெடுத்தவனகரிற்கடிதுசென்றேதிலதயிலம்
பொருந்திடவமைத்தாண்டிடருறுமளவிற்போந்தனமூலமாத்தானை. (க௬௪)

சகசிரவெளமாயறைந்திடுமூலத்தானையையிராமன்மேன்முடுக
மிகவுநெஞ்சொல்கிக்கவிகள்பாறிடலும்வெருவலென்றங்கதனிறுத்த
விகழ்விலாவிளையோயவர்களைக்காவென்றேவியேகன்னலேழரையிற்
பகலவன்குலமனுயிரம்வெளமும்பகழிமாமழைபொழிந்தறுத்தான். (க௬ரு)

இரியும்வானரமாவினங்கள்மேலடர்ந்தவிராவணனிலக்குவன்மீதின்
விரைவினின்மோகாத்திரம்விடவதனைவீடணன்மொழியினுலிளவ
லரிபடைவிடுத்தேயறுத்திடக்கதமுற்றனுசன்மேலரக்கனேவயிலை
யுரமிடைதனிலேற்றுயர்சுமித்திரைசேயொல்லையினயர்ந்தனன்மாதோ.

வீடணன்றனைக்காத்துரமிசைக்கதிர்வேல்விலங்கவேற்றிடுமிலக்குவன்முன்
வாடிமண்மிசையின்விழுந்திடவரக்கன்மகிழ்வொடுதன்னகர்சேரப்
பீடுடையனுமன்மருந்துபோய்க்கொணரப்பிரிந்திடுமுயிர்வரத்தெளிந்து
கூடினனிராமன்றனையவனனுசனுகியகொற்றவன்மன்னே. (கசுஎ)

வேலினுலிராமனனுசனைவென்றமகிழ்வொடுமேவியவரக்கன்
மூலமாத்தானைக்கினியநல்விருந்தையளித்திடவழையெனமொழியக்
காலன்வாயவர்கள்விழுந்திடவிராமன்களைந்தனனெனவொற்றர்சழற
வாலமேகிகராயிராவணன்கதமுற்றமர்செயப்புகுந்தனனம்மா. (கசுஅ)

மகபதியிரதமலருளோன்மொழியால்மாதலிகொணர்ந்துமுன்னிற்பக்
ககபதிமிசையின்வயங்கிடுமாயோன்கவினுறத்தேர்மிசையேறி
நகபதியெனவேயிலங்கிவந்தடருமகோதரனமனுலகடையச்
சிகிபதிவிசிகந்தனின்விசைசெய்தான்றேவர்கள்மலர்மழைபொழிய. (கசுஅ)

மந்திரியெனவேவயங்கியங்கெய்திமகோதரன்மடிந்திடமுனிந்து
வெந்திறலரக்கனிரதமேல்வரலும்விறலுடையிராமனுமடர
வந்தனதிசைகளாசினிவரைகளயனமர்ந்திடுநகரடங்கச்
சிந்தையினினையுமுனரெணில்சாரிதிரிந்தனர்சிலீமுகம்பொழிந்தே. (சஎ0)

தீயவன்முனிந்துசிலையினுல்மாயச்சிலீமுகம்விடுத்திடவிராமன்
தூயமாஞானக்கணையினுற்றுணிப்பநிருதனேர்சூலம்விட்டெறிய
மாயவனதனைச்சலத்தினுங்காலவலத்தினுற்றுசளுறநூறி
ஆயிரங்கணையாலரக்கன்றன்சிரங்கையதனையுமறுத்தனனம்மா. (களக)

கணையினுல்விழுந்தசிரங்கரமனைத்துங்கடிதினிற்கிளைத்திடநோக்கி
யிணையிலாவிராமன்சிலையினுல்விடுப்பவிலங்கியசதுமுகாத்திரத்திற்
பணியணிமுதலும்பங்கயத்தவனுங்கொடுத்திடும்வரமெலாம்பருக
மணிதிகழ்கலன்களுறமுரமுருவமண்மிசையிராவணன்மடிந்தான். (களஉ)

சுரர்மலர்பொழியத்துந்துமிமுழங்கத்தூயமாமுனிவர்கணடிப்ப
வரையெனத்தரையினிராவணன்மடியமயன்மகளரற்றியேமாயச்
சரியிலாவிராமனருளவீடணன்முன்றம்முனையெரியினைவளர்த்தி
யருமறைநெறியாற்றிலமயமளித்தேயனகனையிறைஞ்சினனம்மா. (களங)

தினகரன்குலமன்னுரைத்திடுமொழியாற்சீருறுமாருதியேகிச்
சனகியையிறைஞ்சியிராவணன்மடிந்தநலன்றனைச்சாற்றிடமகிழும்
வனிதைநீர்படிந்துகலன்களுமணிந்துமறுவிலாவீடணன்மகளோ
டனகனைவணங்கவவன்கதமுறலுமனலிடைவிழுந்தெழுந்தனளால். (களச)

அரிமுனிந்திடத்தானனலிடைவிழுந்தவரிவைதன்கற்பினாலந்த
வெரியிறைவெருவிச்சிரத்தினிற்சுமந்தேயிராமனையிறைஞ்சிநின்றேத்தப்
பரிவின்மைதிலியைமகிழ்ந்தருளிராமன்றனையுயர்பங்கயத்தவனு
மரனொடுமயிராபதத்திறைதுதிப்பவமரர்கள்மலர்மழைபொழிந்தார். (௧௭௫)

அயனகர்தனினுமமரர்கள்பணியவந்தரதுந்துமிமுழங்கத்
தயரதனுகவிராகவன்வணங்கத்தனையனைத்தழுவிநன்மருகிக்
கியல்புறுவசனமுரைத்திலக்குவனையணைத்திடுந்தாதையையிராமன்
றுயருறுபரதனன்னையாமிவளைமுனிந்திடாதருளெனச்சொன்னான். (௧௭௬)

மாயவனருளத்தயரதவரசன்மைந்தநீவனத்திடையேகத்
தீயகைகேசிவிளைத்திடும்வினையாலவளுடன்சேயையுமிகழ்ந்தேன்
றூயவவிவணீசொலுமொழியாலேயிவர்கள்மேன்முனிவினைத்துறந்தேன்
மீயுயர்வடமீனனையசானகியாமின்னுடன்வாழெனவகன்றான். (௧௭௭)

தாதைமீதுரைத்துப்பெயர்ந்திடவிராமன்றமனியப்புட்பகவிமான
மீதினிற்சனகியுடன்மகிழ்ந்தமரின்வீடியவசரனையனுமான்
போதன்மாநகரிற்கொணர்ந்திடப்பருதிபுதல்வன்வீடணன்முதலானோ
ராதரவுடனேயமர்ந்திடக்கடலினணையதாஞ்சேதுவையடைந்தான். (௧௭௮)

சேதுவைத்தனுவினுதியினாற்கீறிச்சிறந்தவைதேகியைநோக்கி
மாதுநின்னுழையின்வருவதற்காகவகுத்தவிவ்வாரியினணைவா
ராதவன்விதுவைக்கலந்தநற்றிதியிற்படிகுவாரிழைத்திடுமன்மம்
வேதியர்வதைசெய்நன்றியைமறக்கும்வினையெலாமாய்ந்திடுமென்றான்.

சுரர்நதிபயத்திற்றோய்ந்துமாண்டகலாத்தொல்வினையாவையுந்திசரி
லரிவைநீயமருமிடத்துறவேண்டியளக்கரிற்செய்தசேதுவினீர்
பரிவுடன்படியினொருவுமென்றிவைகள்பகர்ந்துபாரத்துவாசன்ற
னருமறைமலியவமருமாச்சிரமத்தடைந்தவனடியினிற்பணிந்தான். (௧௮௦)

வரிசிலைக்குமரன்மனைவியோடடைந்துவணங்கிடமாதவனடிசில்
பரவையினமிர்தநிகர்த்திடவளிப்பவருந்துவோன்பவமின்மாருதியை
விரைவினிற்பரதன்மகிழவென்வரவுவிளம்புகென்றேவிடவிவன்போ
யெரியினிடைவிழுவோன்றனைத்தடுத்திவணினிராகவனெய்தினனென்றான்.

திருவுடனிராமனடைந்தனனெனுஞ்சொற்சிறந்திடுமாருதியுரைப்பப்
பரதனெஞ்சுவந்துதிசையினைநோக்கிப்பணிந்தெழுமுனரின்முன்னவன்றான்
விரைவினின்விமானமிசையினினிலத்தின்மேவிடவணங்குபின்னவனை [தான்.
உரமுறத்தழீஇக்கொண்டனையர்தாளிறைஞ்சியோங்குசத்துருக்கனையணைத்

துயிறுறந்தருளித்தமையனைத்தொடர்ந்தசுமித்திரைசெம்மல்வந்திறைஞ்ச
வியல்புறுபரதன்மகிழ்வுடன்றழுவவனையர்தாளிறைஞ்சிலக்குவனை
மயலறுமவனைநிகர்த்தசத்துருக்கன்வணங்கிடமார்பினினணைத்தான
புயலுறும்பரிபார்புரந்தரசெயித்துப்பொன்றிடவென்றிடும்புனிதன். (௧௮௩)

கருமுகிலெனவேகவினுறுமிராமன்கனிட்டர்களுடன்சடைகழித்துச்
சரயுநீர்படிந்துமறையவர்துதிப்பச்சரியிலாவயோத்தியினெய்தி
யரிதிகழ்ந்திடுபொன்னவிர்கொளாசனத்தினமரர்கள்போற்றிடமிதலைத்
திருவுடனிலங்கவசிட்டமாமுனிவன்சிறந்திடுமவுலியைக்கவித்தான். (கஅச)

மாருதியரியாதனங்கரத்தேந்தமதிநிகர்கவிகையைப்பரதன்
சீருறக்கவிக்கச்சுமித்திரைதனயர்சிறந்திடுங்கவரிகளசைப்ப
வாரியினிலங்குதிருவும்வெள்கிடவேவயங்குமைதுலியருகிருப்ப
வாரியன்கரியவனாயின்மீதொளிருமலரிபோல்முடியுறவமர்ந்தான். (கஅரு)

திங்கள்மும்மாரிபொழிந்திடலக்குந்தியர்க்குஞ்செய்மையோடணிமை
தங்கிடாதுயர்மெய்ஞ்ஞானிகள்புகழத்தாரணிபுரந்திடுமிராமன்
பங்கயத்தணங்கைப்பழித்தமைதுலிதன்பயோதரமணந்திடக்கருப்ப
மங்கைதன்வயிற்றினமர்ந்திடவரியாசனத்தின்மேல்வயங்கிடுநாளின். (கஅசு)

ஆதியாமாசனவனியின்மிசையின்விடுத்திடுமொற்றர்வந்தணுகி
யேதமாரிலங்கையிராவணன்கொடுபோயிருஞ்சிறையிருத்திடவிசழ்வாஞ்
சிதையைப்பினருமனைவியாயணைக்குமிராகவன்செய்கைநன்றென்றென்
றோதுவர்சனங்களௌவுரைத்திடக்கெட்டுளைந்தகோவிவைமுயன்றனனால்.

அவனியினுறைவோரிகழ்ந்திடுவினையாலழுகியசனகியையிராம
னுவமையிலிளவிரதமீதேற்றியுயர்ந்தவான்மீகிதன்வனத்திற்
கவ்வையுற்றிரங்கவிடுத்திடப்பணிப்பக்கடுவினைகளையுமம்முனிவன்
பவமிலாவணங்கின்பருவரலகற்றிப்பன்னசாலையிற்கொடுசென்றான். (கஅஅ)

சுசியுறுமுனிவனிருப்பிடத்தமர்ந்தசுந்தரிகருப்பம்விஞ்சிடநற்
குசலவவொனும்பேர்வயங்கிடவிரண்டுகுமரரைப்பயந்திடுபோழ்திற்
புசவலனுடையலவணனைவதைக்கப்போந்தசத்துருக்கனுமரசன்
வசையறுமறையோர்க்கெண்ணின்மாதானம்வழங்கினன்சாதகமுடித்தே.

சனகிதன்றனையர்முகக்கவினோக்கிச்சத்துருக்கனவனொருவி
வினையறவமரர்வெருவவெஞ்சமர்செய்யிலவணன்சிரமறவீட்டி
யனகனையிறைஞ்சவவன்மகிழ்ந்தொருநாளந்தணனிரங்கிடவிறந்த
தனையனுக்குயிர்வந்தெழுந்திடத்தவஞ்செய்சம்புவைத்தடிந்தனன்மாதோ.

ஆதவனெனநீளவனியினீதியடைந்திடப்புரந்திடுமிராமன்
வேதியர்மகிழச்சுருதிநூல்நெறியால்விளங்கயமேதயாகத்தைத்
தீதறநடத்துந்தினத்தினிற்சனகிசிறுவராங்குசலவர்தமக்கு
மாதவன்சவுளமுடித்துபநயனஞ்செய்துநான்மறையறிவித்தான். (ககூக)

மறையையோதுவித்தும்வயங்குவான்மீகிமதில்கள்சூழ்ந்திலங்கியவிலங்கை
யிறைவனைவதைத்தசரிதையையறிவித்திடவவரிராமனையிறைஞ்சி
நெறியுறவிசையினிராகவன்கதையைநிகழ்த்திடமகிழ்ந்திடுபோதிற்
றுறைவிலம்முனிவனடைந்திவருனதுகுமாரரென்றுரைத்தனனம்மா. (ககூஉ)

முனியிவையறையத்தெசரதனிராமன்முந்திடுகளிப்பினாற்றனது, தனையனாய
ணைத்துச்சனகியையழைத்துத்தழலிடைவிழுந்தெழுகெனலும், வனிதையா
ண்டிசையும்பொழுதினின்மலரோன்மொழியினால்வசந்தனாயெய்தி, யனகன்
முன்னணங்கைப்புவிகிழிந்திடத்தன்னங்கையினெடுத்தணைத்தகன்றாள்.

புவிகிழிந்திடநீளவனியின்சனகிதனைக்கொடுபோகலுமுனிந்து
தவர்வெருவுறத்தன்றனுவினைவளைத்துச்சாயகந்தொடுத்திடும்போழ்திற்
சிவனுடன்முனிவர்திசைமுகன்வலாரிதேவர்களிராமனையணுகி
நவையறுமிறைநீநரருருத்தரித்தாய்நாங்களுய்ந்திடவெனநவின்றார். (௧௯௪)

மலரயன்முதலோரிவையெலாமுரைப்பமனதிடைச்சினத்தினையொருவி
நலனுறுமறையாற்குரகதமேதமகத்தினைநடத்தியவிராம
னுலகினைவருடம்பதினோராயிரமுமுற்றிடப்புரந்திடத்தாயர்
நிலமிசையிறப்பவனலிடைவளர்த்திநெறியினாற்றில்மயமளித்தான். (௧௯௫)

தாயரங்கிறப்பச்சதுமறைநெறியாற்றடக்கையாற்பிண்டமங்கருளுந்
தூயவன்முனரின்மறலியந்தணனாய்த்தோன்றியேயானுனக்குரைக்கும்
வாய்மைதான்முகியுங்காறுமிவ்விடத்தினொருவரும்வந்திடாவண்ணம்
நீயருளெனலுமிளையவன்றனக்கிவ்வுரையினைநிகழ்த்தியுட்புகுந்தான். (௧௯௬)

எவர்களுமடையாதிலக்குவகாத்தியென்றுதன்வாயிலினிறுவு
முவமையிலிராமனமர்ந்திடமறையோனோதுவானுலப்பிலாவண்டம்
நவையறப்படைத்தாண்டழித்திடுமிறைநான்முகன்வேண்டலால்நரனா
யவனியினிருதர்குலமறப்பிறந்தாயெனுமொழியறைந்திடும்வேலை. (௧௯௭)

விரைவினின்விடமாகியதுருவாசன்மேவலுமிலக்குவன்றடுப்ப
வரனெனமுனிந்துன்குலமறச்சபிப்பனெனவவனஞ்சியேசென்னச்
சரியிலாமனனிம்முனிவரமகிழ்வோடிறைஞ்சிடத்தவனவன்றனைநீ
பரனிவண்மனிதனாயினையெனுமுன்பாதியேகரந்தனன்மறலி. (௧௯௮)

அரனிகர்முனிவனிவையுரைத்தகலவந்தணன்றனையிவன்காணாப்
புரவலன்றுருவாசனையிவண்விடுத்ததாரெனப்புகன்றிடவிராம
னுரையினைமறுத்தேனினிநிலத்தமரேனுயிர்விடுவேனெனவிளவல்
சரயுநீர்படிந்துநிகரிலாவனந்தனுருக்கொடுபரகதிசார்ந்தான். (௧௯௯)

சரயுவிற்படிந்தாண்டிளவலேகியசொற்சார்தலுமிராகவனிரங்கி
யிருநிலமிசையினிலக்குவனிராமலிரேனெனக்குசலவர்தமக்கு
விரைவினின்முடியைக்கவித்துலகாளவிதித்தெழில்மாருதிதனைப்
பிரமனாற்பதம்பின்பெறுகுதியதனாலிருத்தியென்றுரைத்தனன்பெருமான்.

பெண்களிற்கவினார்ந்திலங்குமைதிலியைப்பிரித்திடுமரக்கனைவதைத்து
வெண்களிற்றிறைவனிடரினைத்தவிர்த்துவீடணற்கரசினையளித்தோன்
எண்கினுக்கிறையைத்துவாபரயுகத்திலியாதவனாகியேயுனது
கண்களித்திடவேமுழையினுமொய்திக்கதியினைத்தருகுவனென்றான். (௨௦௧)

வீடணன்றனக்குவிமானமீதரங்கத்துறையும்வித்தகன்றனையுதவி
யாடகமிலங்குமிலங்கையினரசையாளுதியெனவிடையருளிப்
பீடுடைப்பரதன்பிறங்குசத்துருக்கனிவரிருவரும்பெருந்திகிரி
கோடெனவயங்கச்சரயுவிற்படிந்துகலுழன்மேற்றுலங்கினன்கோமான்.

இரவிசேய்முதலாயிரங்கியகவிகளெண்ணிலருடனயோத்தியினிற்
கரிமுதலுறவிகடையதாமுயிர்கள்கமலனன்னகரிடையடைய
வருளின்விண்ணமரர்மலர்மழைபொழியவந்தரதுந்துமிமுழங்க
விரசையைக்கடந்துசனகிவந்திறைஞ்சவிமலன்வைகுண்டத்தினமர்ந்தான்.

வேறு. அராவணைதுறந்தடலரக்கர்குலமாளத்
தராதலமுமெண்டசரதன்றனையனென்ன
நிராசையுறவேநிருபனுகிலனாரு
மிராமனெனுமாதிசெயலீதெனவறைந்தான். (௨0௪)

துட்டர்களெலாமடியவேகணைதுரந்து
சிட்டர்களெலாமகிழவேசிலையெடுத்தா
னட்டதிசையெண்ணவருமாடவர்கள்கோமான்
வட்டமுலைநற்கவுசலைக்கினியமைந்தன். (௨0௫)

தீயர்குலம்வீயநிலமீதொளிர்கோள்தேவன்
மாயவன்முராரியளவில்செயல்வகுப்ப
வாயுமறைநாலுமுகன்வாய்மையினடங்கா
தூயகமலத்திறைவியென்றுரைதொகுத்தான். (௨0௬)

தவந்திகழுநாரதனெனுந்தகைமையோன்முன்
பவங்களறநன்கொடுபகர்ந்தவுரைகேளாக்
கவந்தனுயிர்கொண்டருள்செய்கானபுகழுன்னி
யுவந்தருளுருக்குமணிமாமுனியொடோதும். (௨0௭)

கோசலநன்னாடுடையவீரனருள்கொண்ட
றேசுநிறையுங்கவுசலைக்கினியசெம்மல்
வீசுபுகழெண்டிசைவிளங்கிடவளர்ந்த
தாசரதியொக்குமவரார்தரணிமீதே. (௨0௮)

வாசமலர்மேவுசனகிக்குமணவாளன்
தேசுவிறலன்வடிவுசீருறநிகர்க்குங்
காசினியினெய்தியுயர்காவலருளாரோ
பேசுமெனநான்மறைபிறங்குமுனிசொல்வான். (௨0௯)

வேலின்விழியாயமிர்தின்மீதினுறைமின்னே
பாலின்மொழியாயவிர்கொள்பங்கயமமர்ந்தாய்
கோலமுறுமன்றசரதன்குமரனைப்போற்
சீலமுறுசோதியுளனென்றுமுனிசெப்பும். (௨௧0)

விற்ருெழிலினல்வடிவினல்மிகுகுணத்தாற்
கற்றுநிறைநூலுணர்வினலருள்களாலு
முற்றுணரின்மற்றுமிகரோதுவமையில்லா
னற்றுவனாமன்னனெனநாயகிவிளம்பும். (உகக)

ஆரவனுதித்தகுலமேதரசுசெய்யும்
பாரொதுசெறுந்திறமையேதுபகரும்மப்
பேரொதுவிரித்தருள்செய்யென்றுபொறிபேசச்
சீரிதெனயாழ்முனிசிறக்கவுரைசெய்வான். (உகஉ)

இராகவப்படலமுற்றிற்று.
ஆ திருவிருத்தம் - உசஈஙரு.

## உங. வது—தேவகிப்படலம்.

ஆசிலாதறனருள்நெறிமறைப்பொருளுணர்ந்தே
மாசிலாமலர்மங்கைதன்மகுணனைவனே
ஈசனென்றறிந்தவன்பெயராயினவெல்லாம்
பேசுவாரடியாரொமையாட்கொளும்பெரியோர். (க)

செஞ்சொனன்முகன்முதலினோர்க்ககப்படாத்தேவ
னஞ்செனக்கொழுந்தென்னநீளவனியிற்றோன்றி
விஞ்சினனவன்புகழினைவிதர்ப்பர்கோன்மகளாங்
கஞ்சமஞ்ஞைநீகேளெனநாரதன்கழறும். (உ)

மாசிலம்புவியாள்கின்றமன்னர்கடனினும்
வீசுதொல்புகழ்வடமதுராபுரிவேந்தன்
ஆசையெங்கணும்பிறங்கியவிறலருளான்ற
போசனென்பவற்குக்கிரசேனனும்புதல்வன். (ங)

அன்னமன்னவனறநெறியருளொலாம்விளங்க
மன்னிநல்லரசியற்றமற்றவன்சுதன்மறமே
துன்னிவஞ்சகந்தொலைவிலாக்கொலையெலாஞ்சூழ
வின்னலோங்கிடுங்கஞ்சனென்றியம்பிடுமிகலோன். (ச)

மாயவஞ்சகம்பிறங்கவேவளர்ந்தனன்மனுநூற்
றேயமெய்யறன்சிதையவேதவழ்ந்தனன்றிரண்ட
நோய்களெங்கணுமுயரவேநடந்தனனுவனுந்
தூயநன்னெறிபழுதுறத்தோன்றியசினத்தோன். (ரு)

காலனென்னவுங்கடலிடையரவுமிழ்ந்தெழுந்த
வாலமென்னவுமருவினையுருவதாமெனவுஞ்
சீலமில்லவன்மறமெலாந்திரண்டெழுமுசுடன்
கோலமானதோர்குரகதமியற்றிடுங்கொடியோன். (சு)

தகுதிநீதியிறந்தவக்கிரனுயர்தலத்தோற்
கசிதனனசாலுவனுடன்சேதியாளதிபன்
சகிதனக்கெனமகிழ்கஞ்சனுகியசமுக்கன்
மகதர்கோன்பெறும்வல்லியரிருவரைமணந்தான். (எ)

அன்னவன்பின்னேனொண்மறைப்பயந்தறனறியு
மன்னனுக்கிரசேனனோர்மகளிலாமையினுற்
பின்னவன்னொழிற்றேவகன்றவத்தினுறபெற்ற
மின்னனூனைத்தன்றனையளாய்வளர்த்தனன்விறலோன். (அ)

பஞ்சணிந்துமேற்பரிபுரம்புலம்புபாதத்தாள்
நஞ்சமஞ்சும்வேனயனத்தாள்முழுநிலாநகையாள்
கஞ்சமென்முகைப்பயோதரிகழையெனுந்தோளாள்
கொஞ்சமஞ்சுகமாகியகொடியிடைக்கொம்பு. (கூ)

நாரியால்வளைசராசனம்போன்றநன்னுதலாள்
காரினீடியேவெறிபுனைமலர்க்கருங்குழலாள்
பாரினேரிலாப்பசுங்கிளிபவளவாயமிர்தஞ்
சீரினல்வடமீனெனச்சிறந்தகற்புடையாள். (க0)

இளரியாழினேடேழிசைக்கின்னரர்மயங்க
வனனுலாவவேயிசைத்தனள்மறுவறுபுராணந்
தளர்விலாவகைநிகழ்த்தினள்சததளமலிந்த
நளினமாதெனத்தேவகிவளர்தருநாளின். (கக)

இணையிறேவகிசவுந்தரியத்தெழினேக்கிப்
பணிகொளும்புயனுக்கிரசேனனும்பரிவாற்
குணமெய்நல்வடிவாற்றல்சீர்நலம்பொறைகொடைசேர்
மணவனூர்மகட்கென்னமந்திரிகளின்மதியார். (கஉ)

சாருமாநெறிச்சாருகதேசமாடலைவன்
சூரசேனனற்சுதன்வசுதேவனுந்தோன்றல்
வீரவேனிலான்வெள்கிடும்வடிவினன்விண்மண்
ணூரும்நேரிலானவனிவட்காகுமென்றுரைத்தார். (கங)

அறைந்தமந்திரித்தலைவர்சொலரசனுமுணர்ந்தே
சிறந்தநல்வசுதேவனுக்கீகுவன்சீர்மெய்
நிறைந்தமின்னினையென்றுயர்நெறியெலாந்தழைப்பட
பறையறைந்தனன்மதுரையிலமர்ந்தபார்த்திபனே. (கச)

இன்னகாலையினியல்வசுதேவனுக்கிசைந்த
கன்னிதேவகிதன்னையேமணஞ்செய்வார்கருதித்
துன்னினூர்கள்மந்திரத்தவர்சூரசேனன்சொற்
றன்னையுக்கிரசேனனுக்குரைத்தனர்தழைப்ப (கரு)

மந்திரத்தவர்மொழியும்வாசகத்தினன் மகிழ்ந்து
சுந்தரத்தொளிர்தேவகிசூரசேனன்சேய்
கந்தரத்தினிலங்கலையெடுத்திடக்களிப்பாஞ்
சிந்துரத்தைநேரரசனுக்குளாமின்சென்றென்றான். (கசு)

வீரவுக்கிரசேனமன்விளம்பியநல்லைச்
சூரசேனனுக்குரைத்தலுமகிழ்ந்தவன்றுலங்கும்
தேரினில்வசுதேவனேடெழுந்துளான்றிரண்ட
சூரரோடியர்மதுரையுய்யானத்திற்சூழந்தான். (கஎ)

மன்னனொண்வசுதேவன்றன்வரவினையுணர்ந்தப்
பொன்னினன்பதியிதுவெனமதுரையைப்புதுக்கிக்
கன்னலொன்றினிலுக்கிரசேனனுங்கடிதி
னின்னலில்லவனைதிர்நடந்தெழினகர்கொணர்ந்தான். (கஅ)

கொணர்ந்துநல்வசுதேவனுங்குமரனுண்மகிழ
வுணர்ந்துவேதியர்வகுத்திடுநாளின்மெய்யுருவ
மிணைந்ததேவகியிருகையாலெழில்கொளுந்தெரியல்
மணந்தழீஇயுறப்புயந்தனிலிட்டனள்மகிழ்வால். (கக)

மெய்யனும்வசுதேவனுமின்னும்வீற்றிருந்தே
நெய்யினாகுதிகனலிடைச்சமித்துடனிறைத்துத்
தையல்கந்தரமங்கலநாணினைச்சாத்திக்
கையினாற்பொரிதேயுவினிறைத்தனர்களியால். (உ0)

நலஞ்செயும்வசுதேவன்கைநாரிதாண்பற்ற
மிலஞ்சுபூங்குழலனமிருள்மிதித்தனளம்மி
வலஞ்செய்தேவர்துவாமருந்ததிகண்டுமகிழ்ந்தார்
நிலஞ்செய்மாதவசிரம்பிடவினிதிருந்தனரால். (உக)

ஆனைநாலுநூறணிமணித்தேர்முந்நூற்றறுப
தினமில்பரியேழாயிரட்டியாயிரமு
மானைநேர்விழிமடந்தையர்திரளிருநூறுந்
தேனினன்மொழித்தேவகிக்களித்தனன்கஞ்சன். (உஉ)

வீதிமேவினர்நகர்வலம்வருதற்குவிரைந்தே
போதநீள்புகரிபங்கள்மாவிருதரும்பொலிய
மோதுபேரிகாகளஞ்சின்னமுழவொடுமுழங்க
மாதுடன்வசுதேவன்றேர்கவினுறவந்தான். (உங)

வேறு. கஞ்சனுநெஞ்சுகளித்துறுகைவேல்
விஞ்சவிலங்கியமன்னவன்மின்முன்
குஞ்சரமாமெனவேகுதிகொண்ட
வஞ்சனடந்துமகிழ்ந்துறுமெல்லை. (உச)

அந்தரநின்றசரீரியரன்செய்
கந்தனையேநிகர்கஞ்சன்முனாக
விந்தமடந்தைதன்மக்களிலெட்டா
மைந்தனினுருயிர்வவ்வுவனென்ற. (௨௫)

பொங்கியவெங்கனலைப்பொழிகண்ணு
னிங்கிவளோபகையாயினளென்றே
யங்கையின்வாள்கொடுதேரினடைந்து
தங்கைநெடுங்குழல்பற்றுசழக்கன். (௨௬)

கொல்லுறுமெல்லையில்யாதவர்கோமான்
புல்லினன்வாளொடுமார்புபொலிந்த
வெல்லையிலாவிறலெய்துதவத்தாய்
புல்லியர்செய்பழிபூணுதிபோலாம். (௨௭)

ஆவுயிர்செற்றவரந்தணர்தம்மைச்
சாவமுயற்றினர்பாலகர்தம்மை
நோவமடித்தனர்நுண்ணிடையார்த
மாவிசெகுத்தவராழ்நரகாழ்வார். (௨௮)

என்றுரைசொல்லியிதம்பெறுவானி
னின்றசரீரிசொலுமிகழாமற்
குன்றெனவேகுவவுப்புயனையா
ஞென்றியதாகவுணர்த்துவகேண்மோ. (௨௯)

இங்கிவள்மைந்தர்களெண்மரையுந்தன்
செங்கையின்வைத்திடுவம்மவர்சேர
மங்கவடித்துயிர்வாழுதியானின்
றங்கைதனுவியுணுதொழிதகவோய். (௩0)

மன்னவநின்னருளேகொடுவாழ்வம்
நின்னுயிர்போகநினைக்கிலநின்பின்
மின்னுதரத்தெழுமைந்தர்விளங்கி
யென்னபயன்றருவார்களெமக்கே. (௩௧)

வல்லவனிவ்வுரைகூறமனத்தே
யெல்லையிலாநலனெய்தநகைத்துக்
கொல்லுகிலான்குழல்விட்டருள்கூர்ந்தே
புல்லினனன்பொடுபின்வருபொன்னை. (௩௨)

எங்கையையானுயிர்கொள்கிலனாக
விங்கிதநல்லுரைசொற்றனையென்றே
வெங்கணன்மைத்துனன்மெய்தழுவித்தான்
பொங்கியவன்பொடுபொன்மனைபுக்கான். (௩௩)

சிற்றியல்முன்னவர்தன்னொடுசீறிச்
செற்றுயிர்கொள்கிலதாய்வகைசெய்யுங்
கொற்றவனேடுயர்தேவகிகூடிப்
பெற்றனளோர்மகவைக்கவைபெற்றே. (ருச)

அம்மகவைக்கொடுசென்றவடானும்
விம்முறுசிந்தையளாகமெலிந்து
தம்முனிருந்தபொன்மாளிகைசார்ந்து
கைம்மிசைவைப்பவுவர்த்துறுகஞ்சன். (ருரு)

பெருகியவன்புபிறங்கிடவேயென்
மருகனையின்றுயிர்வவ்விலனென்ன
வுருகியசிந்தையனெண்கொடியைத்தன்
னருகமரொன்றிருகையினமைத்தான். (ருசு)

மன்னவனென்மருகன்னிவன்வாடா
தின்னலெய்தாதுவளர்த்திடுகென்று
பின்னவள்கையினளித்திடவேபோய்
முன்னவனைத்தொழுதாள்கைம்முகிழ்த்தே. (ருஎ)

இன்னலனெய்தியயாதவர்கோமான்
தன்னுடனற்கலவிக்கனிசார்ந்து
கன்னல்கொணுள்பலவுங்கழியச்சீ
ரன்னமனுள்பினுமைவரையீன்றுள். (ருஅ)

ஆறுமகப்பெறுமாயிழைநெஞ்சந்
தேறினனல்வசுதேவனுமன்பா
லூறியசிந்தையுரோகணிமாதை
மாறிலமாமணமேவிமகிழ்ந்தான். (ருகூ)

பாரிதனேடைதுகுலம்வருமகிபன்
பேரிதமோடுறவேபெலன்மல்கு
மாரதனுகியகஞ்சன்மனைக்கே
நாரதன்மேவினனுகர்துதிப்ப. (சo)

வந்தமுனிக்கெதிர்மன்னியகஞ்சன்
கந்தமலர்க்கொடுகாலினிறைஞ்சிச்
சிந்தையுவந்துறுதீயவனுக்கே
முந்தியனுமுனிசொல்லமுயன்றுன். (சக)

கஞ்சவுனக்கொருகாரியமிங்ஙன்
விஞ்சவுணர்த்திடுவேனதுமெய்யுன்
னெஞ்சினமைத்திடுநீயெனவென்றும்
வஞ்சமிலாமுனியின்சொல்வழங்கும். (சஉ)

உக்கிரசேன னுவந்தருடேவி
யிக்கிரதச்சொலியின்னமையென்னத்
தக்கவணீர்படியுஞ்சதுநாளிற்
புக்கனள்மண்டபமீதுபொலிந்தே. (சங)

பஞ்சணைமன்னியிருந்தவள்பல்கால்
விஞ்சுநலக்கலவிக்கனிவேண்டிச்
செஞ்சொலனுக்கிரசேனனையுன்னி
வஞ்சமில்மங்கைவருந்துறுமெல்லை. (சச)

கெந்தருவத்தருமன்கிளியன்னாள்
சிந்தையறிந்தவனுக்கிரசேன
னந்தவுருக்கொடுபோயினடந்தே
வந்திடமின்னுமகிழ்ந்தெதிர்கொண்டாள். (சரு)

கொண்கனடைந்தனனென்றுகுளிர்ந்து
கண்கள்களித்தெழவேயுயர்கற்பாள்
பண்கொளுநன்மொழிபஞ்சணைமீதிற்
றண்களபத்தொடுதண்மலர்தந்தாள். (சசா)

இன்பமுறுங்கலவிக்கனியெய்தி
யன்புடனன்னமணைத்திடுமெல்லை
நன்பதிசெய்குறிதாழ்ந்ததுகண்டே
துன்பமுழந்தழல்கண்ணினள்சொல்வாள். (சஎ)

செஞ்சொலனாகியவென்கொழுனன்சீர்
விஞ்சியநல்லுருவாகிவிளங்கும்
வஞ்சகவாரெனவானிடையேகி
நஞ்செனும்வெய்யவனின்றுநவின்றான். (சஅ)

என்கணவன்னெனவுற்றனைகற்பால்
நின்கணதாமகவுண்டெனநீசப்
புன்கணனுயவநின்னுயிர்போக
வன்கணநீயவனுல்மடியென்றாள். (சகூ)

அன்றுறுகெந்தருவன்மகனீயாம்
பொன்றுகவென்றனையன்னைபுகன்றாள்
கன்றினனென்சுதனன்றெனவேகாய்
வொன்றினனுக்கிரசேனனிதுண்மை. (ருo)

வேறு. சீலமாகியவுக்கிரசேனன்றேவகன்போர்
வேலனெண்வசுதேவனேடிவர்கள்விண்ணவர்கள்
மாவிறேடடார்ந்துலப்பிலாச்சமர்செய்துமடிந்த
காலநேமியாமசுரனீகஞ்சனுய்ப்பிறந்தாய். (ருக)

ஆதலாலிலையகாதியாயமரர்கட்கசுர
ரேதலார்களாமென்னின்முன்பிறந்துபின்பிறந்த
போதுபோகுமோவழிப்பகை * பூதம்யானுணர்ந்த
திதெலாமுறைத்தேனின்னமியம்புவதுளதால். (ருஉ)

வேறு. அன்றியும்நின்னிளையாடனையர்க்குள்
வென்றிகொள்வானொருவீரியன்வந்தே
கொன்றிடுவானுனையென்றுரைகூறிப்
பொன்றலினாரதமாமுனிபோனான் (ருங)

தூய்தவமாமுனிசொல்லுரைகேளாத்
தாய்பகைதந்தைமுழுப்பகைதங்கை
சேய்பகையென்னிதுவென்றுதிகைத்தே
யேயெனுமுன்னரெழுந்துயர்கஞ்சன். (ருச)

தங்கைதன்னிண்மனைபுக்கசழக்கன்
வெங்கனல்மல்கியகண்ணன்வெகுண்டே
யங்கவள்சேயறுவோரையுமாவி
மங்கவடித்தனன்வாயைமடித்தே. (ருரு)

காவலனுங்கணவன்றுயர்கண்டே
பாவமிதேவகிநெஞ்சுபதைப்ப
நாவலனுக்கிரசேனனடங்கக்
காவலியற்றினன்விஞ்சியகஞ்சன். (ருசு)

மானகுசன்னியுரோகணிமங்கை
யானகதுந்துமிகூறிடவாயர்
கோனகமேவினள்கொண்கனையுன்னித்
தேனகுமென்மொழிசிந்தையுழந்தே. (ருஎ)

உக்கிரசேனனுருக்கொடுதன்னை
யக்கிரமத்தினளித்தபிதாவை
யுக்கிரவெஞ்சமர்செய்துயிர்கொண்டே
விக்கிரமத்தொடுமெண்டிசைவென்றான். (ருஅ)

புனைந்தனனன்மகுடம்புனையத்தி
மனந்தனின்வஞ்சமறங்கொலைமாயந்
தினந்தினமும்வளைபோலெழவேசெய்
யினந்தொடர்கஞ்சனிருந்திடுமெல்லை. (ருகூ)

தேவகிப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உசகூ௫.

* பூதம-கடந்த விருத்தாந்தம

## ௨௪. வது—கண்ணன் திருவவதாரப்படலம்.

இருபிறைகவ்வியேயெழுந்தமைவனை
வருசெயலாமெனவராகமாய்மனங்
கருகியவாடகக்கண்ணன்வீயவே
தரணியையிடந்தசக்கரனையேத்துவாம். (௧)

நீதியில்நிசாசரர்நெறியினீங்கிட
மோதிடுமசுரர்களரசர்முந்தியே
வேதனையுலகெலாம்விளைப்பமெய்ம்மலி
பூதலக்கிழத்தியும்பொறுமையாலரோ. (௨)

மெய்யெலாமெலிந்தனள்வேதஞ்சோர்ந்திடப்
பொய்யெலாங்கெழுமிடப்பொருமினள்மனம்
வெய்யராங்கலரிராக்கதர்கள்வேரறச்
செய்யெலாம்வகையினிச்சிந்திப்பாளரோ. (௩)

சூகரமாகியன்றவுணன்றெற்றிட
வாகையேபுனைந்தெனைமணந்தமாயனார்
நாகணைமீப்பயோததியில்நண்ணுறும்
யோகமாந்துயிறுறந்துதவினன்றென. (௪)

பிரமனுமுனிவரும்பிறங்கணுதனுங்
தருவமர்ந்திடுநகர்ச்சசிதன்கொண்கனே
டுரனுறுமிலேகருமுய்யவண்டமுண்
பரமர்தாளிறைஞ்சியான்பகர்வனீதென. (௫)

சாமளரூபிநற்றரளமாலைசேர்
கோமளமென்முலைக்குதலைக்கோகிலம்
வாமனன்றேவிவாட்கண்ணிமல்லல்சால்
சோமன்மானனைத்தூயகற்பினள். (௬)

இடமதாயிருப்பநிற்பனவோடெண்ணிலா
உடல்கொடுதிரிவனபறப்பனவூர்வன
யடைவனபல்லுயிரனந்தமெய்தவு
மிடரறப்பரித்ததற்குணவுமீகுவாள் (௭)

வேறு. அம்பரநற்பதத்தினச்சுதானந்தனுமா
யம்பரம்பாரீரடியினுலளந்தோன்றன்றேவி
யம்பரங்களேழுமழகார்வருணமுறு
மம்பரங்களாய்க்கெழுமவேதிகழுமாரணங்கு. (௮)

சேடன்பணங்கவிகையாகச்சிறந்தவுடற்
பீடமதினேறிக்கவின்கொணிலப்பெண்ணமுதங்
கோடுடையவெண்களிற்றுக்கோமுனிவர்தேவர்களு
மாடுறமாமுண்டகத்தோன்வாழுமுலகெய்தினளால். (௯)

நாவினுறைமறைகளுந்திருத்தாளாய்
மேவுபொறைமெய்யாவிழியிரண்டும்நல்லருளாய்
வீவிலறங்களெல்லாமேனியுரோமமுமா
யாவின்வடிவாகியெய்தினின்றாளவனிமின்னே. (௧0)

கோவுருவாய்நின்றவசுந்தரையாங்கோமளத்தைத்
தேவருடன்தேவேந்திரன்முனிவர்தாந்திரண்டு
பூவிலயனுடனும்போற்றியெதிர்சென்றினிதா
மாவலுறநான்மறைகொடேத்தியறையலுற்றார். (௧௧)

அன்னையவனியெனுமாரமிர்தேயன்புமிகும்
பொன்னேயகழ்வாரைத்தாங்கிப்பொறைநிறையு
மின்னேயுயிர்களுக்குவேண்டுமுணவருள்வாய்
தன்னேரிலாதநலத்தாமோதரன்றேவி. (௧௨)

பாரோயுருவாப்பருவரைகளேநகிலாக்
காரேகுழலாக்கடலேழுமாடைகளாச்
சீரார்சசியிரவிசேலோர்விழியிரண்டா
வேராரிளங்கொடியேயேழுலகுமீன்றமின்னே. (௧௩)

வேழ்விநிறையவிளைவயலாமெய்த்தவத்தோர்
சூழ்கைதவமொருவத்தூயநெறிபிறங்க
வாழுமுயிர்பதத்தின்வைகவருளளிப்பா
யாழிதிகழ்செங்கையமலன்றிருத்தேவி. (௧௪)

கோலமாநின்றெயிற்றிற்கொண்டெங்குறளுருவாக்
காலினலன்றளந்துந்தாங்கிக்கமடமதாப்
பாலனுயுண்டுமிழ்ந்தும்பையநடந்தேயிருந்த
மாலினர்மாலாயணையுமடக்கொடியே. (௧௫)

என்றுதுதித்தார்மறைகொடேத்தியெழுந்திறைஞ்சி
மன்றன்மலரோன்விபுதர்மாமுனிவர்வாசவனு
மொன்றிமுலைப்பாலுதவுமாகண்டுளமகிழுங்
கன்றெனத்தாம்நெஞ்சுருகிப்பின்னுமவர்கட்டுரைப்பார். (௧௬)

வந்தகருத்தறிந்தாமண்மடந்தாய்வல்லசுர
ரந்தமென்றுமில்லாக்கரவடர்கடாந்துவன்றி
வெந்திறல்கள்செய்யமெலிவுற்றமின்னேயுன்
சிந்தையிடர்மாற்றுவதற்கெம்மாற்செயலரிதால். (௧௭)

தீர்ப்பானுங்கைதவங்களெல்லாஞ்செகமுழுதுங்
காப்பானுமூவடிதாவென்றவுணன்கைந்நிறைநீ
ரேற்பானுமேழ்பொழிலுமுண்டுமிழ்ந்தவெம்பெருமான்
பார்ப்பாரந்தீர்ப்பான்கடற்றுனைப்பைந்தொடியே. (௧௮)

ஆதலினால்மாயோனமர்பாற்கடலணுகப்
போதனலனென்னும்புரந்தரன்புத்தேளிர்திர
ளுதில்மலரோன்முனிவர்சித்தவித்தியாதரரும்
நீதியுறுநிலமானேடுநெறிசென்றனரால். (ககூ)

சென்றார்பல்யோசனைகள்சேலுருவாத்தீயவரை
வென்றேகராவிசிப்பநொந்துவிதலையுற்றே
அன்றானைமூலமெனுமுன்வந்திடரகற்றி
நின்றான்றுயிலும்நெடும்பாற்கடலடைந்தார். (உ0)

வேறு. பெருந்தடவரையைநிறுவிநீளரவைப்பிணித்துறக்கடையயானளித்த
மருந்துபோலின்றுநுகர்ந்திடவேண்டாம்நினைக்கவேவைகுந்தத்திருத்தி
யருந்துணியொருவித்தன்னிறமாக்குமமிர்தரவினிற்கருவனமா
யிருந்ததென்மீதிற்காண்மினென்றியம்பவருவபோற்பயோததியெதிர்ந்த.

பவமெலாமறுக்கும்பருவரலகற்றும்பலசமயங்களின்முயங்கு
மவமெலாந்துறக்குமைம்பொறியடக்குமறநெறிபொறையருளளிக்குந்
தவமெலாமுயர்த்துஞ்சக்கரத்தவன்றாளிறைஞ்சிடச்சடக்கெனவருகென்
றுவமைநேரில்லாப்பயோததிகரத்தாலழைப்பபோற்றரங்கமுமுலாவ.

மன்னுரையிகழுங்கனகன்முன்னெழுவின்மடங்கலாயெழுந்துரம்வகிர்ந்து
மிகமெலிகயமன்றழைத்தசொற்பிந்தமுந்திதன்பதத்தினின்விடுத்தும்
நிகரில்வாரிதியைக்கடைந்தமிர்தளித்துநிருதர்வேரறுத்தருணெடுமால்
புகழெலாம்பரந்துபொலிந்தபோற்றிருப்பாற்புணரியுமெழுந்துபொங்கியதே

வெறிமலர்மகணன்புவிமகணீளையென்னும்வேல்விலோசனையுடனும் [ந்து
பொறியரவணையின்மிசைப்புயலெனவேபொருபடையைந்துடன்பொலி
சிறையுடைக்கலுழன்வலம்வரத்திருமாலென்வயிற்சேர்தலான்மற்றை
அறுவகைச்சலதியெனக்குநேரலவென்றார்த்தபோற்கலித்தபாற்கடலே.

புயறனையூரும்புரந்தரனுடனற்புண்டரீகத்தயன்புவியா
மயிறுயரமுப்பத்துமுக்கோடிபுலவர்மாதவர்புடைசூழ
வியலினலடைந்தாரிவரிடரொருவவெழுகநீயென்றுமாறனையே
துயிலெழுப்புவர்போல்முழங்கியதரங்கம்பிறங்கிடத்துலங்குபாற்கடலே.

முப்பதோடிரண்டாமிலக்கம்யோசனையாமுடுகியபயோததிநாப்பண்
டுப்பராமணிகோமேதகம்வயிரம்புஷ்பராகந்துப்பநீலஞ்
செப்பமார்மரகதம்வயிடூரியம்பசுஞ்செம்பொன்னாலிழைத்த
வொப்பிலாவிமானம்யோசனையெழுநூறாயிரம்நீண்டகன்றொளிர. (உசு)

நேரிலாவனந்தனுடல்மிசைவேற்கணிறைந்திடும்பலமலர்மலியுஞ்
சீருறுமுன்னூற்றொருபதாயிரயோசனைசிறந்தகன்றநீளணைமேற்
பேர்களாயிரத்தோன்வனசமாமலர்கள்பிறங்குநீலக்கிரிபோலு
மேருறவிருநூற்றைம்பதாயிரயோசனைதனைவடிவெழிலுறவே. (உஎ)

பாதம்யோசனை நூறுயிரமகங்காலிருபத்தையாயிரம்பதுமப்
போதுநற்புளியாறைந்திறுயிரமன்பத்திரண்டாயிரம்போலிவுற்
றேதமிறுடையினகலமோர்கைந்நூறுயிரமெழில்கொளங்குலிக
ளோதிறெவ்வொன்றுயிரமிருபத்தைந்தாயிரங்களவட்டமொளிர. (உஅ)

திருமுகவளையமுப்பதோரிரண்டாமாயிரம்யோசனைசிறந்த
புருவநேத்திரங்காதிவ்வகளுமொவ்வொன்றுயிரம்யோசனைபொருந்தச்
சரியில்வண்கொடிமூக்குயோசனையஞ்ஞூறெளிரமுந்நூறுயோசனைதான்
றெரிவுறுதிலகத்தூரியம்பிறைநேர்நுதலினிற்றிகழ்வுறத்துயில. (உகூ)

தூய்மையாந்தபனர்கோடிபேர்தன்னியெழுந்தபோற்றிகிரியுந்துலங்கத்
தேய்விலாக்குமுதசகாயன்வானகத்திற்றெறிந்தபோல்வலம்புரிசிறப்ப
மீமிசையண்டத்தப்புறத்திருளுந்துறக்கும்வாள்கதையொடும்விளங்கத்
தீவினையொருவப்பிறங்கியசார்ங்கந்திசைவிசும்பெங்கணுந்திகழ. (௩0)

மீயுயர்மவுலிக்கவின்றிசையெல்லாம்விளங்கிடவிழிகளுமிலங்க
மாயிருவிசும்பினிவர்தமனியப்பூதரமெனவயங்கிடப்புயங்க
ளாயிரகோடிகாவதமளவாச்சிறகறைகாற்றுவந்தசைப்பத்
தூயமாக்கலுழன்றெழுதுபாற்கடலைச்சுற்றியேவலமதாய்ச்சூழ. (௩க)

வானின்மீப்பிறழுங்கதிரொனமவுலிவயங்கிடவதனமுந்துலங்க
வீனமேயிலாதவிழிகளுமிமைக்கவிடரறநிலமளந்திடந்த
கோனணிந்தருளுந்தேன்முரறெறியல்குனிந்தெழின்மார்பினிற்குலாவச்
சேனைநாதன்கைப்பிரம்பொளிதிகழத்திசையிருநான்கினுந்திரிய. (௩உ)

உரமதாற்றிருவெட்டெழுத்தையுள்ளிருத்தியுறுபகையறுவருமோட
வரமதாற்றகருமயமெனத்துணிகளறுத்துயருந்தவமடையக்
கரமதாற்றொழுதுமெய்ம்மயிர்பொடிப்பக்கண்கணீர்புரளவேகளிக்கும்
பரமபாகவதர்மொழிந்தபல்லாண்டுபரவையினொலியெனப்பரவ. (௩௩)

ஆரணனீயேயவனியுந்நீயேயவனியன்றுண்டுமிழ்ந்தளந்த
காரணனீயேகனைகடல்நீயேகனைகடல்கடைந்தவனீயே
பூரணனீயேபொறிகளுந்நீயேபொறிகளிற்பொலிபவனீயே
நாரணனீயேயென்றுரைநவின்றுநாரதமாமுனிநடிக்க, (௩௪)

ஒருமுதலுணர்ந்தோரிருபிறப்பாளர்முப்பகைகடிந்தவூற்றத்தா
ரருள்செறிமறைநான்கறைபவர்வேள்வியைந்துசெய்யறுதொழிலாள
ரிருளெழுவிளமையிரியவெட்டெழுத்தையிதையத்துளிருத்துவோரோத்து
முரையினையமிர்தின்சுவைபழித்தமரர்செவியினூலுண்டுண்டுயுவப்ப.

தருவமர்நகராளியைத்தனையிட்டோன்றந்தையின்பஃறலைதடிந்தோய்
கரியுரிசெய்யுங்கணிச்சிவானவன்றன்கையினிற்கடிகமன்றொழித்தோ
யரியரியரியேசெயசெயவெனவேயருமறையிசைகொடுபகர்வார்
தருதருமலரேசொரிபவர்தாளந்தத்தத்தித்தியென்றோத. (௩௬)

கிம்புருடாதிகருடகாந்தருவர்கின்னரர்கீதம்யாழ்கிளர்த்தத்
தும்புருதுதிக்கநாரதர்வீணையிசைத்திடத்துந்துமிமுழங்க
வெம்பராதிருவாழ்மார்பமராமாயாவென் றுதம்மிதையத்திலிருத்தி
நம்பியேநயனம்புனல்கொளுமன்பர்நாவினுன் மறைப்பொருணவில. (௩௭)

கண்ணிணைமுகுந்தன் றிருமுகக்கவினைக்கண்டுளமகிழக்கண்களிப்பால்
விண்ணிறைமதியினிலவெனமுறுவல்விளங்கிடவளையொலிவிளைப்ப
மண்ணணங்குயருங்கமலமாமலரின்வரும்வடிவுடையவளாமப்
பெண்ணமிர்தனையரிருவருமமலன்றிருவடிசெங்கையாற்பிடிப்ப. (௩௮)

கருவரைமிசையினிறைகதிரொழிலக்கனகமார்மவுலியேகாட்டப்
பெருவரைபிணித்தவரவெனப்புயத்தினணிவலயங்களும்பிறழத்
தருவெனத்திகழுந்தடக்கையிற்கவின்கொடரளநற்கடையமுந்தயங்கத்
திருவரையதனிற்செம்பொனின்கொடிகத்தழகுவான் றிசையெலாந்திகழ.

விண்டலத்திருண்டபயோதரத்திரண்டுமெருங்கினும்விரிகதிரவி
மண்டலமெழுந்துவயங்கியபோலவள்ளையாங்காதினின்மகர
குண்டலநிறைந்தெல்லுறுகுருமணியின் குழாங்கணற்கவினெடுங்குலாவி
அண்டர்கள்பெருமான்றிருமுகத்தழகுக்கலங்கிருதம்பெறவமர்ந்து. (௪௦)

தன்னுடைக்கரத்திற்சார்ங்கமுமிரண்டாய்வளைந்தபோற்புருவங்கடயங்க
நன்னிலவனையமுறுவலுங்கொடிமூக்கழகுடனயனங்கடிகழ
மின்னொளிபலவாய்விளங்கியேயிருண்டமேகமேலணைந்தமாண்பெனவே
துன்னுபன்மணியின்றொகைகணீடுளபமணிதிருமார்பினிற்றுலங்க. (௪௧)

தெண்டிரைக்கடலினெழுகதிரொனநற்கவுத்துவமார்பினிற்றிகழ
வெண்டவர்வலாரியிமையவர்பிறங்கவிருசுடர்மகோததியிலங்கு
மண்டமுமயனொடுதித்திடவிலஞ்சித்தடத்தினிற்புறப்படவலரும்
புண்டரீகத்தினிகழ்களினெழிலிப்புவனமெண்டிசையினும்பொலிய. (௪௨)

திருநயனங்களிரண்டுடன்பவளச்செய்யவாய்திருக்கரமலரு
மருவுமிழ்மணியார்மார்பமுமாமையரவிந்தநாபியினவிருந்
தெரிவையரிருவர்செங்கையோடொளிர்வீரக்கழலமர்திருத்தாளுங்
கருமுகிற்றடத்திற்கமலநற்காடுமலர்ந்ததோர்காட்சியைக்காட்ட. (௪௩)

கோகனகத்தேனிலமகணீளையென்னும்வேல்விழியொளிர்கொடியு
மோகையோடுறவேபயோததியிலங்கவுயர்மணிப்பஃறலைப்பகுவாய்
நாகணைமிசையிற்கருங்கடல்பரந்துகிடந்ததோர்நலத்தினையுறவே
யோகமாந்துயிலையுவப்பவன்போற்றன்கண்மூகிழ்த்துறங்குவான்றன்னை.

வேறு. இன்னமெய்வனப்புறத்துயில்கொள்ளுமெம்பெருமான்
றன்னையெவ்வகைகாண்பமென்றூர்கள்மாதவத்தோ
ரன்னவெண்ணிடையுயரிறையம்பரத்தும்பர்
பொன்னினன்னகரிறைவொடும்போற்றிசெய்தனரால். (௪௫)

# கண்ணன் திருவவதாரப்படலம்

பச்சைமேனியபழம்பொருளாகியபரம
நச்சராவணைமிசைத்துயில்முகுந்தநாரணநின்
னிச்சையாலவதரித்திடுமிறைவவெம்மீச
வச்சுதாவனந்தாபள்ளியுணர்ந்தருளாயே.

வெற்பினைக்கடைமத்தெனவேலையுணிறுவிச்
சற்பம்வண்கயிறுகிடக்கடைந்தமிர்தத்தை
யற்பமாமசுரர்க்கிடாதெமக்குவந்தளித்த
வற்புதாவமலாபள்ளியுணர்ந்தருளாயே. (சஎ)

ஒதமேயுறுநளினியினிடங்கர்வெஞ்சினத்து
மோதியேயொருதாளினையிசித்தவண்முடுகச்
சோதியேயெனுங்கறையடிதுனியறத்தோன்று
மாதிமூலவச்சுதாபள்ளியுணர்ந்தருளாயே. (சஅ)

சூதராமதுகையிடவரவர்கள்மெய்துணிய
மோதிநீள்கடறடுசேலுருவாமெனமுளைத்து
வேதநான்முகற்கருளியவிமலவித்தகனே
ஆதியேயரியேபள்ளியுணர்ந்தருளாயே. (சகூ)

சிவனெனும்விறலுடையபொற்கண்ணனைச்சேர்ந்தே
யவனுடற்குருதிப்புனலளக்கரின்மடுப்பப்
பவனவேகவெங்கேழலாயெயிற்றிடைப்படுத்தே
யவனியன்றிடந்தாய்பள்ளியுணர்ந்தருளாயே. (ருo)

இருளகற்றியஞானமெய்ப்புதல்வன்சொல்லிவரு
தருளகற்றியவாடகன்கரத்தினாலறையும்
விரியுநன்மணியெழுப்பிளந்திடவிர்விளங்க
வரியுருக்கொளுவாய்பள்ளியுணர்ந்தருளாயே. (ருக)

மடிவிலாதுயர்மாவலிமூவடிவழங்க
நெடியனாயண்டமுகடுறநிவந்துபேரொளியாய்ப்
படியும்வான்றிசையடங்கலுமடங்குறும்படியீ
ரடியினாலளந்தாய்பள்ளியுணர்ந்தருளாயே. (ருஉ)

விடத்தையுட்பொதிகுணத்திராவணனகர்மேவுந்
தடத்தைநற்றிமாவருணன்மேற்சரங்களைத்துறந்து
படைத்தலைக்குழாங்கொடுகவியெண்கினாற்பரவை
யடைத்தமெய்ப்பொருளேபள்ளியுணர்ந்தருளாயே. (ருங)

சீலமாகியபிரமகற்பங்களுஞ்செறிந்து
வேலையெங்கணும்பரந்தண்டம்விண்டிடும்வேலை
பாலனாயுலகேழையுமுதரத்துட்பதித்தே
ஆலின்மேற்றுயில்வாய்பள்ளியுணர்ந்தருளாயே. (ருச)

கமலநாயகிகணவபீடுடையகாகுத்த
நிமலநேமியநெடியவநிசாசரர்கால
விமலகேசவகுத்தசாத்திககுணவீர
வமலநாரணனேபள்ளியுணர்ந்தருளாயே. (ருரு)

இனையதானசொல்வழாமறைப்பொருளினாலேத்தி
முனிவர்வானவர்மகபதிமுண்டகத்திறையோ
டனைவரும்மமலாவிடாரகற்றுவாயென்று
நினையுநெஞ்சினருருகினராலுளநிறைய. (ருசு)

எட்டெழுத்தையுமிதையத்துளிருத்தியேகமதா
யுட்டெளிந்திடக்கைதவமொழித்துயர்ஞானத்
திட்டியாலுயர்சிறந்தவேதப்பொருடன்னோ
டொட்டிநின்றதாம்யோகமாயுருகிடுமெல்லை. (ருஎ)

வேறு. செயலுறுமம்புயமலர்கள்சேர்ந்ததோர்
புயலொருகனகபூதரத்தையுற்றெனத்
துயில்பிரிந்தருளிநற்கலுழன்றோளின்மே
லியல்புறுகமலைமார்பிலகவெய்துவான். (ருஅ)

துந்துமிமுழங்கிடத்தூயபானுவு
மிந்துவுந்தயங்கிடவெழுந்தமேகம்போல்
நந்துசெந்திகிரியுங்கரத்தினண்ணநற்
சுந்தரமவுலியும்வயங்கத்தோன்றினன். (ருகு)

அறந்தவறுதமாலனுகவார்வமுற்
றிறைஞ்சினர்கமலனோடெண்ணின்மாதவர்
நிறைந்தமெய்ஞ்ஞானியர்நயனம்நீருக
வறைந்தனராரணம்பாடித்துள்ளினார். (சு௦)

பாடினர்விளரியாழ்பலவும்பண்ணுற
வாடினர்முடிமிசையங்கைகூப்பினர்
பீடுறும்வைகுந்தப்பிரானைமேவியே
சூடினர்துளவங்கடலங்குதாண்மலர். (சுக)

ஊழியாயிரங்கடான்யோகமாய்நின்றே
சூழுமாவினையறுந்தவர்க்குந்தோன்றலான்
வேழமூலம்மெனவிரைவின்வந்தபோ
லேழையாமெமக்கிரங்கினனென்றுடினார். (சுஉ)

துள்ளினர்தரணிவராகனைக்கத்தூய்மல
ரள்ளினர்சொரிந்தனரானந்தக்களிப்
புள்ளுறப்பொடித்திடவுரோமங்கண்கணீர்
வெள்ளமொத்திழிதரவிளம்புவாரரோ. (சுங)

வேறு. ஈசநேமியவெம்பரனேயலே, வீசுபாற்கடல்மேவியவித்தக
மாசிலாமலர்மங்கைதன்னையக், கேசவாகெருடக்கொடியாய்நம. (கூச)

சீரொணுவவுணன்றருசேய்வின்மண், பாரணுபரமாவெனவேத்துமப்
பேரொணுதவனுசம்பிளந்தனே, நாரணுதிருநாயகனேநம. (கூரு)

ஆதியேயமலாவிமலாவருட், சீதராமுகுந்தாசெகநுங்கிய
பூதநாயகமாயபுராதன, மாதவாமண்மகண்மகுணநம. (கூசு)

பாவந்தானறப்பாரிருணீக்கிய, தீவந்தானெனச்சேணுயரண்டமுந்
தாவுந்தாளதயாபரசற்குண, கோவிந்தாகுறையேதுமிலாய்நம. (கூஎ)

துட்டனுனவிராவணன்றுன்னகர், சுட்டவாசுகன்சூனுவுடன்கடல்
கட்டியேயவ்வரககனைக்காய்ந்தருள், விட்டுவேவிதியுந்தருவாய்நம. (கூஅ)

வேறு. மதிஞானமிலாமறமேகிறையு, மதிஞலடியோமுனைநன்கதியோங்
கதியாமுறநின்கழல்நீயருள்வாய், மதுசூதனமாயவனேநமவே. (கூகூ)

வருமுக்கிரராவணனன்மவுலி, சிரமுக்கிடவேயுரமுஞ்சிதைய
வெரிமுக்குறுசாயகமெய்தருளுந், திருவிக்கிரமாதிருமார்பநம. (எ0)

வேறு. காமனுர்தமைமால்கியகாரண, வாமையாயம்புராசியமர்ந்துளாய்
சாமரூபசங்குசக்கராயுதா, வாமனுமறையின்பொருளேநம. (எக)

காதிகாதலன்வேள்வியைக்காத்துநீள், தீதுசாலிலங்கேசனைச்செற்றுளாய்
சூதிராநெஞ்சர்தம்முனிற்றேற்றுவாய், சீதராதிருநேமியினுய்நம. (எஉ)

மருடவிர்ந்துமறையொருநான்கினின், பொருடெரிந்துனைப்போற்றிசெய்வா
கருடவாகனனேகதிராழிய, விருடிகேசவிறையவனேநம. [ர்க்கருள்

கதமொழித்துக்கயவர்களாகிய, வதன்மனத்துறந்தேயறநீங்கலார்க்
கிதமதாகியசிந்தையர்க்கெய்துவாய்ப், பதுமநாபபழம்பொருளேநம. (எச)

வேறு. தீமோதியபோல்வினையேதிகழுங்
காமாதுரர்வஞ்சகமேகளைவோய்
தாமாதரவால்கினைசற்குணனே
தாமோதரனேதலைவாநமவே. (எரு)

எனவேபலவேதமெடுத்துரைசெய்
துனையேயலதொன்றுமுரைக்கிலா
மனமேயுடையோம்வினைமாற்றுகெனச்
சொனவானவருட்பிரமன்சொலுவான். (எசு)

வேறு. இராவணனிரணியனிரணியக்கணன்
றராதலத்துயிர்களைத்தடிந்தெல்லோரையு
மிராவணமியற்றுவாரிராமற்போக்கினு
யராவணைதுறந்துவந்தருள்திவையனே. (எஎ)

என்னையும்படைத்தனை தானுன்னின்னரு
டன்னினுலெண்ணிலாவுயிர்கடந்தனை
னன்னவர்தமிற்கொடியவராமாய்த்திடப்
பின்னைநானறிகிலேன்பெருமைநீயலால். (எஅ)

மகதனுந்தந்தவக்கிரனுமாயமே
மிகுநரகனுமுரண்மிக்ககஞ்சனும்
பகனெடுசேதிபன்பவுண்டரன்றிறல்
நிகரில்சாலுவனுடனிருதரும்பலர். (எகூ)

தீயெனவுருத்தனரறமுந்தேய்ந்திட்
மாயமெண்ணிலாதனவஞ்சம்விஞ்சவே
நோயெனத்திரிந்தனருலகைநுங்குவார்
தூயநான்மறைநெறிதிறம்பத்தோன்றினர். (அ௦)

சூழ்வினைதழீஇயகஞ்சுகத்தர்சுற்றிநல்
வேள்வியினவியையும்விலக்கியெம்மையும்
தாழ்வினிற்படுத்தியேதருக்கினார்கள்யாம்
வாழ்வினையொழிந்தனமாதவாவென்றான். (அக)

இருக்கினின்மறையவரிருகையாரவே
யருக்கியமளிக்கிலரறமுமோய்ந்திடத்
திருக்கறுமருக்கனற்றோர்செலாவகை
நெருக்கினரசுரர்கணேமியாயென்றான். (அஉ)

இன்னனபலபகர்ந்திடர்களேமுய
வன்னவர்தங்கள்வேரறுத்தெம்மன்னையா
மின்னிடைவசுந்தரையலக்கண்வீய்ந்திட
வுன்னுவாய்மாயவென்றுரைக்குமெல்லையின். (அங)

வேறு. தேனுவின்னுருவிற்சென்றபார்மகள்
மானையெய்தமதுணன்மலர்ப்பதந்
தானிறைஞ்சித்தனைழத்தெழுமன்பினு
னீனமில்வசனங்கள்யம்புவாள். (அச)

என்பொருட்டினிரணியக்கண்ணினு
னின்புருட்டினையேனமதாகியென்
னன்பவச்சுதவாழியங்கையயான்
றன்புழுந்துவந்தேனெனச்சொல்லுவாள். (அரு)

நீசரானவரொங்குந்நிறைந்தனர்
பேசலார்கள்மெய்பொய்கள்பிதற்றுவார்
கூசலார்மறவஞ்சங்கொலைசெய்வார்
நாசமாகிலராய்மெய்நடுங்குவேன். (அசு)

துலங்குமாசயிலத்தைச்சுமந்தயா
னலங்கொள்வோர்செய்தநன்றியைக்கொன்றிடும்
விலங்குநாவினரெய்தமிடுக்கிலேன்
கலங்குவேன்விடங்கண்டவர்போலவே. (அஎ)

எல்லையற்றபிறங்கல்களேந்தும்யான்
சொல்லவல்லகொடியவர்தம்மினு
மில்லுளாளையிகழ்ந்துபிறர்மனை
புல்லுகின்றவர்தம்மைப்பொறுக்கிலேன். (அஅ)

எட்டுமால்வரையேந்துமெனக்குநற்
சிட்டரோடுமுற்றேசெல்வந்துய்த்தவர்
கெட்டபோதினின்விட்டகெடுமதித்
துட்டர்பாரஞ்சுமத்தற்கரியதால். (அகூ)

வேதபாரகர்தஞ்செயல்விட்டனர்
நீதிமாறினர்நீணிலமாள்பவர்
மாதர்கேள்வர்தம்வாய்மைமறுத்தனர்
தீதுசேர்கலரொங்குந்திரண்டனர். (கூ0)

உதவியாயினர்க்கொன்னலராயின
ரதன்மராயினர்பாரினையாள்பவர்
வதைகளேமுயல்வார்குருமாற்றமு
மிதமதாகவெண்ணார்வினையீட்டுவார். (கூக)

ஆவிழந்தனரந்தணர்கன்றினர்
நோவவெவ்வியவவ்வியநோற்றிடும்
பாவர்தம்மைக்கணமும்பரிக்கிலேன்
சாவெனைக்கருணாகரவென்றனள். (கூஉ)

செய்யமாதுக்கிடர்செய்ததீயனும்
வெய்யராவணன்வீழவேவாளிக
ளெய்தமாதவவென்னையிகழ்ந்திடி
னுய்யுமாறெனக்கில்லையென்றோதினள். (கூங)

பாரியானநற்பாரணங்கானவள்
கோரமாங்கலரால்நொந்துகூறிய
நேரிலாவுரைகேட்டருணேமியான்
சீரிதாந்திருவாய்மலர்ந்தேசொல்வான். (கூச)

பாவகாரியர்யாவரும்பற்றறக்
காவலன்வசுதேவன்கணுகிய
தேவிதேவகிதானருள்சேயதாய்
மேவுவேனிலனென்றுவிளம்பினன். (கூரு)

தேசுடன்புவிமாதுசிறந்தனள்
வாசவன்கமலாசனன்வானவ
ராசையெங்குமுனிவரோடாடினார்
வீசுநாண்மலரின்வெறிவிஞ்சவே. (கூசு)

கீதம்வீணையிசைத்தனர்கின்னரர்
வேதமோதினர்மெய்த்தவத்தோர்களும்
போதனோடுவலாரிபுத்தேளிருஞ்
சீதமாமலர்வீசினர்திக்கெலாம். (கூஎ)

இனையதாயகளிப்புடனெண்ணிலா
முனிவராகண்டலனயன்மூர்த்தியே
யினியராகியிறைஞ்சினர்மால்பதம்
புனைதுழாய்மலர்சூடினர்போற்றியே. (கூஅ)

போற்றிசெய்யுமவர்க்குப்பொற்பாரநா
வேற்றினாணையுமும்பரோடேசெனுச்
சாற்றியேபுவிதன்னைத்தெருமரல்
மாற்றியேவிடையீந்தருள்மாதவன். (கூகூ)

அனந்ததீர்ந்தவமலன்றனன்பரா
மினந்தனோடுபயோததியெய்தியே
மனந்தனால்நினைந்தேமணிப்பஃறலை
யனந்தனார்க்கொருவாய்மையருள்செய்வான். (௩00)

கற்புமிக்கிடுந்தேவகிகாண்குறுங்
கெற்பமாகியுரோகணிக்கிள்ளையாம்
பொற்பினாடன்வயிற்றுதிபோயெனச்
சற்பராசனைமுற்செலச்சாற்றினான். (௩0க)

மாயைதன்னைவரவழைத்தாழியா
னுயவொண்ணுமசோதைமகளெனப்
போயுதித்திடுதேவகிப்பொற்கொடி
சேயுரோகணிசேயெனச்சேர்த்துமே. (௩0உ)

திருவினாயகன்கூறிடத்தேவகிக்
கருவதாய்த்திங்களேழினைக்காட்டிமெய்
தருமுரோகணிதன்வயினுஞ்சிலஞ்
செருவலோனெனச்சேடனுதித்தபின். (௩0௩)

அரவின்வைகியவாழியங்கையன்பாற்
பரவைதன்னைப்பொருவர்தம்பாடியிற்
சுரபியெண்ணிலதாகிமுற்றோன்றெண
வுரைசெய்தானுயிர்தோறுமுறைபவன். (௩0௪)

அண்டமுற்றுமபின்றருளாழியா
னண்டர்தங்களைநோக்கியவனியி
னண்டநூன்முனிதன்மரபாகியே
யண்டறொன்னவவதரிப்பீரென்முன். (௧0௫)

ஆயகாலையினட்டவசுக்களிற்
றூயனுன துரோணனுக்கும்மவன்
சாய்விலாக்கற்பினுடனொத்தேவிக்கு
மேயவன்புகழ்வேதனியம்புவான். (௧0௬)

மாதவன்வசுதேவன்மதலையாய்ப்
பூதலத்தினுதிக்கும்புதல்வனு
யாதலானந்தகோபனசோதையாய்ப்
போதுமின்னிலத்தென்றனன்பூமகன். (௧0௭)

திருவையுமுயர்தராணித்தேனையு
மருவுமானிலமீதினினென்றுமா
லுரைசெயுக்கிரசேனன்பின்னேனுவர்
தருளுமாதுதரத்தினமர்ந்தனன். (௧0௮)

வேறு. தேவகியுதரந்திகழநற்கருப்பமாகியசிறான்றன்னைப்
பூவின்மெய்த்தவனெண்கயிலையங்கிரிவாழ்புராரியும்வலாரியும்புகழ்சேர்
தேவர்கள்முனிவர்கருடகாந்தருவர்சித்தவித்தியாதரர்சூழ
நாவினுன்மறைகொண்டுளமகிழ்களிப்பால்நயனநீருகநின்றுநவில்வான்.

ஏகபாதவத்திற்பலமிரண்டியைந்தமுப்பணைநாற்சுவையினிய
தாகியசிவமைந்தாறதாமுருவமமைந்ததோலேழெட்டுக்கவடே
யோகையாமூர்த்திநயனமொன்பதுபத்திலையுடையவ்விருக்கத்தின்
சாகையினொருபுட்டிரிந்துதானுகருஞ்சான்றதாயொருபுட்பார்த்திருக்கும்.

ஒருமரங்குரம்பையதன்மதன்மங்கனுளைத்திடுமிருபலமாகு
மருவுமுப்பணைசாத்திகவிராசததாமதகுணமூன்றெனவறைவ
ரிரதநற்சுவைநான்கறம்பொருள்காமமிணையிலாமோக்கமென்றிசைப்ப
ருரனுறுசிபமொண்சுவையொளிபருசமோசைநாற்றங்களோரைந்தே. (௧௧௧)

உருவமாறெனவேயுனாக்குவதன்னையுதரத்திற்கருப்பமொண்டொழிந்தே
யிருநிலமிசையிற்சனனமாங்குயர்தலியவனமூப்புறுநாச
முரணுறுதோலேழெனுமதேயுட்டோல்மூடுதோல்வள்ளுரதிறையுங்
குருதிமேதசைநீளத்திவெங்குடராகிணமெனக்கூறுவரன்றே. (௧௧௨)

கவடிருநான்கென்றறைவனவுயர்ந்தககனமாசுகங்கனலயமண்
ணுவமையின்மனசுபுத்தியாங்காரமுடனிவையெட்டெனவுரைப்பர்
நவையறுநயனம்நவமெனவறிஞர்நவின்றதுநான்தெரிந்துரைக்கிற்
புவியிடைவிரசுஞ்செனங்கள்தம்முடலினவத்துவாரங்களாய்ப்பொலியும்.

தெசவிலையெனவேயறைவதுபிராணுபானநல்வியானமுந்திரள
விசையுறுமுதானசமானநாகன்கூருமன்கிருகரன்விளாங்கெழுந்தே
யசைவுறுதேவதத்தனஞ்செயமீங்கையிரண்டாமெனவறைவர்
வசையிலீர்க்கஞ்சஞ்சரிக்குமறசீவன்மறுவிலாப்பரனொடுமிரண்டே. (ககச

அந்தமாமரநீயறன்மறன்குணநீசுவைசிபமமர்ந்திடுமுருவ
மூந்துதோல்மூர்த்திநயனநீளிலைசெய்முயற்சிநீசீவனீபரனீ
யெந்தைநீயெண்டிக்கேழ்கடல்வரையேழுலகநீயுந்தியினென்னைத்
தந்தநீதந்திக்குதவியேகராவைத்தடிந்தசக்கரக்கையனீயே. (ககரு)

பிறவியாமுலப்பில்பெருங்கடறன்னைப்பெருமவுன்றொடொழுகினைப்பா
மறுவிலாநாவாய்கொடுகடந்தேறிவானவர்மலர்மழைபொழியக்
குறைவிலாத்தீபநிறைதிசைவயங்கக்கொடிகுடைசாமரைதிகழ
நிறைவுசேர்பரமபதத்தினெய்துவர்கள்நின்னடியாரெனவாழ்வார். (ககசு)

ஐம்புலனடக்கியனிலமேயுணவாயருவரையேறிநீள்விசும்பி
னும்பர்கள்வெருவத்தழலினுப்பண்மெய்யோகமாயிருந்தவரெனினு
மெம்பரநின்றொடொழுகினைவறியாவேழையரிருநிலமுருக்கொள்
கொம்பிலாதுயரவெழுவபோல்வீழுங்கொடியெனமறுகிவீழ்ந்திடுவார். (ககஎ)

அண்டமெண்ணிலாதநின்வயிற்றடக்கியருளுவாயைம்பொறியடக்கு
மெண்டவர்நின்றொடொழுதுதஞ்சென்மவிருஞ்சிறையொருவுவரென்றால்
முண்டகருடனெவ்வுலகமுந்தந்தமுராரியேயுனக்குமெய்ப்பிறவி
யுண்டெனவுரையாரறிஞருஞ்செனமம்வயிரியர்கோலமென்றுணர்வார்.

ஊரிலியுருவமிலிகுணமிலிபேரிலியிழைகருமமொன்றிலியா
லாருனையறிவாரறிந்தவர்பிறவியளக்கரினமிழுந்திடாவண்ணஞ்
சீருறுமீன்கூருமகிரியரிமான்குறண்மழுச்சிலையலாயுதராய்
நேரில்யாதவனுயிவணிளிற்றோன்றிநிகரிலாக்கற்கியுமாவாய். (கககூ)

கஞ்சமென்மலரோனுருவெனவுல்கம்படைத்தியாற்ககனமீதெழுந்த
வஞ்சனமேகமாயவுன்னுருக்கொண்டளித்தியாலளக்கரினெழுந்த
விஞ்சியநஞ்சநுகருவோனுகித்துடைத்தண்டம்விண்டிடுமேனு
ளெஞ்சின்மாவடத்தினிலையின்மேற்குழவியெனவமர்ந்தீறிலாதிருப்பாய்.

அச்சுதானந்தகோவிந்தநமவேஆயிரம்பெயரினாய்நமவே
பச்சைமாமெனிப்பரமனேநமவேபயோததிதுயில்கொள்வாய்நமவே
நச்சுமாதவர்களுயகநமவேநான்மறைச்சோதியேநமவே
யிச்சையாய்நீயுண்டுமிழ்ந்தவிவ்வுலகிற்பிறந்தருளிறைவனேநமவே. (கஉக)

என்னும்வாசகங்களிருக்கெசுச்சாமவதர்வணவேதத்தினியம்பி
மன்னுனைகதுந்துபியருள்போசனருளியமகள்முனுந்தோன்றி
மின்னுநேமியனுன்வயிற்றிடையமர்ந்தான்விளங்கியதுலகமெம்மிறைவ
னன்னையாமணங்கெவாழியென்றயனுமருந்தவமுனிவருமகன்றார். (கஉஉ)

என்றுநான்முகனுமிமையவர்திரளுமேழைபங்காளனுந்தாரக்
குன்றினைகிராங்கரியுடைக்கோவுங்கொடியபொற்கண்ணனைக்கொன்றே
பன்றியாயெழுந்தன்றிடந்தபார்மகடன்பாரநீயொருவியேவாழ
வினறுமாநிலத்திற்றிருவவதாரஞ்செய்கெனப்போற்றியெகினரால். (கஉங)

மாதவரிமையோர்மலரயன்வலாரிமதிவளர்சடையினேன்பிறரும்
போதலுமுராரிதிருவவதாரமுணர்ந்திந்துபொலிந்தனன்கீழ்பால்
மீதலநிறைந்ததாரகைவிளங்கவிண்மிசைத்தருவெனமண்ணிற்
பாதவங்கனிகள்மலிந்திடப்பாலைவெம்மைபோய்மருதம்போற்படிய. (கஉச)

அறமெலாந்தழைக்கவமரர்கள்மகிழவானிறைசுரந்துபால்பொழிய
மறமெலாந்துணியமதியிலாவரசராசுரர்வாளரக்கர்கடங்க
டிறமெலாமவியத்திரண்டவாமத்தோடிடித்திடத்திவினைமடிய
மறுவிலாவீரமகளுளமகிழமண்மகடவம்வளர்ந்திலக. (கஉரு)

அந்தரமிசையிற்றுந்துமிமுழங்கவமரர்கள்மலர்மழைபொழிய
நந்துசேர்மலர்க்கையுருப்பசியரம்பைதிலோத்தமைமேனகைநடிப்பச்
சுந்தரஞ்செறியாழ்நணுகுறவிசையாற்றும்புருநாரதர்பாடக்
கந்தநன்மலரினளாவியேவசந்தமுலாவிடக்கதிர்நிலாவெறிப்ப. கஉசா)

வேறு. பொங்கிலாதவெட்டாந்திதிபோந்திடச்
சிங்கநாயிறுரோகணிசேர்ந்தநாட்
சங்கநேமிதரித்தகைதன்னுடன்
செங்கண்மால்சிறந்தேயுதையஞ்செய்தான். (கஉஎ)

தேவகிச்சொடியும்வசுதேவனுங்
காவலிற்றளைகாலிறகழன்றிட
வாவலின்னெழுந்தார்வமகத்துற
மூவரொண்ணியமூர்த்தியைப்பார்த்தனர். (கஉஅ)

வேறு. கஞ்சமென்மலர்க்கண்ணிணைதிகழ்வுறக்கண்டார்
விஞ்சுநன்மணிமவுலியும்விளங்கிடக்கண்டார்
எஞ்சலின்றுளிர்திகிரிகோடிருகையிற்கண்டா
ரஞ்சலென்றவாட்கரமுந்தண்டமர்கையுங்கண்டார். (கஉகூ)

சிலைகுனிந்தெனச்சிறந்தநற்புருவமுங்கண்டார்
மலிகவின்கொடிமூக்குடன்வதனமுங்கண்டா
ரிலகுகுண்டலங்காதினினுறுமெழில்கண்டா
ருலகயின்றருள்வாய்மலரொளியையுங்கண்டார். (கங0)

கந்தரந்திகழாரமுங்கலன்களுங்கண்டார்
மந்தரம்மெனக்குவவுத்தோள்வனப்பையுங்கண்டார்
சுந்தரஞ்செறிகவுத்துவந்துலங்குவகண்டா
ருந்திகண்டவுருதரபந்தனத்தொளிகண்டார். (கஙக)

கோலமாங்கடிதடம்பொனிறுடைமேற்குலாவக்
காலினூபுரம்பரியகந்தண்டைகள்கதிரா
யேலநல்லவிர்வீசிடவெழிலியைகிகர்க்கும்
பாலனுகிமெய்க்கவின்கொளம்பரமனைக்கண்டார். (௧௩௨)

பொன்னினன்மலரிமையவர்பொழிவனகண்டார்
துன்னுநற்றுழாய்முடிமிசைத்துலங்குவகண்டா
ரன்னையும்வசுதேவனுமத்தனும்ஞானந்
துன்னுசிந்தையாராடினரிருகையாற்றெழுதே. (௧௩௩)

சுற்றியேவலம்வந்தொளிர்தாளினைத்தொழுதே
யிற்றதாம்பருவரலெனவாடினரியல்பாங்
கொற்றமாகியயதுகுலமன்னனுங்கொடியு
மற்றைநாட்களிப்புற்றமையறைபவராரோ. (௧௩௪)

ஆயதோர்பெருங்களிப்புறமன்னையும்பிதாவுந்
தூயகேசவமுராரியேகனகன்மெய்துளைத்த
சேயமாகியபரமநற்பவளம்போற்றிகழும்
வாயநீமகவாயதேனெமக்கென்றுமகிழ்வார். (௧௩௫)

வேறு. சிற்றவ்வைசொல்லத்திருவுறச்சேர்த்தம்பியுட
னுற்றுயர்கானெய்தியிலங்கையுறுமொன்னலனைச்
செற்றுலகமேழுந்திருநாபியின்விளங்கப்
பெற்றவனைப்பெற்றனம்யாம்பெற்றவரம்பெற்றவரார். (௧௩௬)

கோலமெனமண்ணிடந்தகொண்டலோவன்றுனை
மூலமெனவந்தருளிகின்றமுழுமுதலோ
வாலநிகர்வாரரந்தைதீர்த்தருளுமச்சுதனோ
பாலனெனவெம்முன்வயங்கும்பரஞ்சுடரோ. (௧௩௭)

என்றென்றுருகியிணைமலர்க்கண்ணுலியுக
நின்றுநினைந்துநெடியவனைத்தானோக்கி
யன்றிவ்வுலகுண்டருளுமாதிப்பரம்பொருளே
யின்றெம்மகவாய்வயங்குமாயமியம்புதியால். (௧௩௮)

வஞ்சனெனுங்கஞ்சன்மதியிலியோன்வந்திடுமென்
றஞ்சினம்யாமென்றறையவாழியான்கேட்டருளிக்
கஞ்சமலர்போன்றவிருகண்ணருளினுேக்கி
விஞ்சுதவஞ்செய்தவர்நீரொன்றுவிளம்பலுற்றான். (௧௩௯)

வேறு. தூயனுஞ்சுவாயம்பூமன்மந்திரத்திற்றோன்றியபிரமனுஞ்சுதவா
வேயதாந்தோளிபிருச்சனியென்னும்பாரியாமெல்லியலுடனு
மாயனுமெனைத்தாங்கண்டிடவிரும்பிவரையினிலெய்திவான்மழையாற்
றீயினுல்வெயிலால்மெலிந்திடார்சருகுதின்றுமாதவம்புரிந்தனரால். (௧௪0)

வாயுவேயுணவாயிவ்வகைபன்னீராயிரமாந்தெய்வவருட
மோய்விலாதரியதவம்புரிந்திடலுமுற்றனென்யானொளிதிகழத்
தூயமாதவனுந்தேவியுமென்னைத்தொழுதவர்பரகதிகோளார்
மாயம்யானியற்றப்பிறவிகடோறுமெமக்குநீமதலையாகென்றார். (கசக)

பெருந்தவர்தமக்கன்றவ்வரமருளிப்பிருச்சனிகருப்பனாய்ப்பிறந்து
கருந்தடமுகிலம்போருகக்காடுபூத்தெனக்காட்சியாய்வளர்ந்தே
யருந்தினனென்றாயீய்ந்தருள்முலைப்பாலன்னையும்பிதாவுமுண்மகிழ
விருந்துமெல்லெனத்தான்றவழ்ந்தழகாரநடந்தவர்க்கின்பமாண்டளித்தேன்.

மற்றுமோர்பிறப்புக்காசிபனாகியதிதியாய்வந்துமாதவஞ்செய்
துற்றிடைக்குறளாயவரிடைத்தோன்றியுயர்ந்துமாபுராணவேதங்கள்
கற்றவனாகிமாவலியீந்தமூவடிதானங்கையேற்று
முற்றமூவுலகுமீரடியடங்கவளர்ந்தனன்முனிவர்கள்தொழவே. (கசங)

ஆதலாலநாதிகாலமேதுடங்கியருந்தவஞ்செய்தெனைமகவாய்ப்
பூதலத்திருகாலுதவிடுமவர்நீருமக்குநான்புதல்வனாய்வந்தேன்
மாதுலனாகஞ்சனைவதைத்துமண்மிசைப்பாரமும்நீக்கி
மீதலத்துயர்ந்தகதியுமக்களிப்பன்விளம்புவதுளதிங்கன்கேண்மின். (கசச)

வேறு. அன்னையெனும்நின்வயிற்றினென்பாயலானமர்ந்து
பின்னையென்றன்மாயையினூற்போந்தேயுரோகணிப்பெண்
ணென்னுமனையீன்றமகனானைசோதையெனு
மின்னின்மகளாய்ப்பிறந்தாளந்தரியாமென்கொடியே. (கசரு)

அஞ்சன்மினீர்கஞ்சனடைத்தகபாடம்வெளியாந்
துஞ்சினர்போற்காவல்செயும்வீரர்துயில்கொளுவர்
விஞ்சுபுனலார்நதியுமேகவழியும்விடு
மஞ்சுபடையுமெனைக்காக்குமெனவறைந்தே. (கசசு)

இந்தவிருளதனிலென்னையிருகையேந்தித்
தந்தையெனுநீயேபொதுவர்பதிதான்புகுந்து
நந்தன்மனையாள்மகனாயுய்த்தவடனன்மகளா
மந்தரியைநீகொடுவாவென்றங்கறைந்தனனால். (கசஎ)

சோதியுரைகேட்டுத்தொழுதுபிதாவுந்தாயு
மாதியுருத்தீண்டுதற்கின்றஞ்சுவோமென்றறையத்
தீதில்வளையாழிசெறிந்ததிருக்கைத்தலமும்
பீதகநல்லாடைமகுடங்கரந்தபெம்மானும். (கசஅ)

தூயசிசுவெனவேதான்தொழுதுதோன்றுமவன்
மாயைதனில்மாயன்வடிவுமுரையுமறத்
தாயெழுந்துவந்துதடக்கையினூற்றானெடுத்தாங்
கேயெனுமுன்மார்பினணைத்தேந்தியிவையுரைப்பாள். (கசகூ)

அடலுறுஞ்சேதிபனுடலெலாஞ்செம்புநீருவிழ
மிடலழிந்தோடலுங்கரிகள்மாதேருடன்வீரரெல்லாங்
குடரணிந்தசையெலாங்குவைசெய்தேயோடுசெங்குருதியான
கடல்கடந்தோடினுர்சிலரதின்மூழ்கிஞராவிகாணுர். (௬௨)

(சிசுபாலப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௪௪௨௫)

## ௭௭ - வது. உருக்குமன் அபசெயப்படலம்.

இரணியனுரம்வகிர்ந்துமற்றவனெழிற்சுதற்கரசளித்துமா
முரணிலங்கைமன்னுவிகொண்டெழில்கொள்வீடணற்குமுடிசூட்டியே
யரவுயர்த்ததுரியோதனனனுசர்கிளைஞருமமரின்வீயவே
தருமனுக்குநிலமருளுமாயனிருசரணமென்னவினைதகருமே. (௧)

தந்தவக்கிரமன்மகதன்வெங்கொடியசாலுவனுயர்பவுண்டரன்
சிந்தியெண்டிசையுமோடவோடிவருசேதிபன்செயல்கள்கண்டனன்
அந்தகற்கும்வலிமிக்கவாண்மைபன்விதற்பராசன்மகளானதேன்
சுந்தரிக்குமுனம்வந்தமன்னவனுருக்குமன்னமர்துடர்ந்துளான். (௨)

வீரரானவர்களமரிஞேடும்விசைநன்றுநன்றெனவிளம்பியோர்
தேரினேரியெழில்கவசமார்பினிடைசேரநீடுசிலைவளைவுறக்
காரும்வானமுநடுங்கவேழ்கடல்கலங்கிடக்கனகசிகரமும்
பாரிஞேடலையநாணெறிந்தொலிபரந்திடப்பணிலமூதிஞன். (௩)

பேரிமாமுரசபம்பைகும்பிகைகடிமிலைபீடுடையவுறுமியுந்
தாரைகாகளமிலங்குசின்னமலிசங்குகொம்பினுடனெறிமணி
வாரியாகுமெனவெண்டிசைக்கணுமுழங்கமாழையுறுவையமேற்
காரிஞேடுலவிமணிகள்மின்னவொளிர்கனகநீடுகொடியிலகவே. (௪)

வீசசாமரைகளுயரவெண்மதிநிகர்த்தவெண்குடைவிளங்கிட
மாசிலாதமணிவயிரமாரமுறவெழில்கொள்மாமகுடமொளிரவே
பூசரேசருயராசிகூறவிருபுடையுமன்னர்கள்பொலிந்திட
வாசையோடுலகுமஞ்சவிஞ்சியவனீகமாக்கடலடர்ந்தெழ. (௫)

சீறுமாகரிகணூறுகோடிவிடுதேர்களுமதனிரட்டியே
மாறில்மாவுமதின்மும்மடங்குவயவீரரென்னிலர்வயங்கிட
ஆறும்வாரிதியெனப்பரந்தபடையொன்பதாயவக்குரோணிகொண்
டேறதேறுமரனஞ்சவஞ்சகனெரிந்தகண்ணினனெதிர்ந்தனன். (௬)

கரிகள்காரெனநிறைந்தெழுந்தவுயர்கணகமன்னுமணியொளிகொடோர்
விரியும்வானமிசைதிகழ்விமானநிரையெயமர்நிலம்விளங்கிடப்
பரிகள்மேவுதிரையாறுபோலவருபடைஞரும்பரவையேலவே
திரணிமீதிலுறவெய்துவார்களரிதன்னைமின்னிஞெடுகண்டனர். (௭)

வேறு. அரிதனெடுமுடுகியடலின்முனைபவர்க
ளிரதகசதுரகமிலகவெறிகடல்கள்
வருதகமையெனவுமரசர்வரிவில்கொடு
துரிதமனதினர்கள்கணைகள்சொரிபவரே. (அ)

புகையினகையினர்கள்பொறிகளுகும்விழியர்
ககனமதிரவொலிகரியின்மிசையிலகு
மிகலர்சுரிகைகளொடெழுவுமெறிமவர்
திகிரிதிகழ்கரனைமுடுகுதிறலினரே. (௯)

துடிகளுறுமிபறைமுரசுதொகையிலக
விடிகள்வெருவவடிபடுவதுவனியுறு
மிடையும்விறலினர்கள்வெடுவெடெனுமொழியர்
கொடியரிரதமிசைகுலவுகொடியினரே. (௧0)

சூலம்வலையமழுவாள்கள்கதைசுரிகை
வேல்கள்குலிசமெழுநீடுகணையும்விடு
கோல்களுடனெறிவர்கோவுளமர்பவனை
யாலமெனவடர்வர்தேரினதிரதரே. (௧௧)

வெய்யவயவர்சிலைகுனியவிசிகமழை
பெய்வருலகயனெடுதவுபெரியவனை
வைவர்சினமலியவனசமலரினுறை
தையறனைவிடுதியென்றுதகைபவரே. (௧௨)

கொடிகளிடையுடையகமலம்வருகுயிலை
விடுதிவிடுதியெனவுரைசெய்விறலினர்கள்
கடியகடுவைநுகர்கயிலையிறைபடைகொ
டிடையனிடையவெதிர்மலைவமெனுமவரே. (௧௩)

ஏகுநெறியடையினேதமறவிலகு
தோகைமலரிவைதூயவழகினுறு
மோகனிவனிரதநூறியெதிர்முடுகி
வாகைபுனைதுமெனவோதுமறவர்களோ. (௧௪)

ஒருவனிவனிரதமழியினுருவதிலை
பொருவசிலையுமிதுநிகரில்புரவலர்கள்
வெருவல்வெருவலெனவுரைசெய்விறலினர்க
ளுருளுமுலையவருகரியினுயர்பவரே. (௧௫)

பரியின்வருவர்சிலர்படைகள்பலவெறிவர்
கரியின்வருவர்சிலர்கணைகள்சொரியுமவ
ரரிகளெனவருவரரசர்வளையினொலி
திரளவகிலமொடுதிசைகள்செவிடுபட. (௧௬)

எதிருமதிரதர்களுடுவினினமுயினி
யுதிருமுதிருமெனவொளிகொள்சிலையினெலி
மூதிரவிடுகணைகள்வடவையெனமுடுக
வதிருமவனியுறுமரவுமனலுமிழ. (௧௭)

வேறு. நெஞ்சழன்றபடைவீரரானவர்கணீதியானநெறியொன்றிலார்
குஞ்சரங்கள்பரிதேர்களானவைகள்கொண்டுகொண்டலைவளைந்தபோல்
விஞ்சவெஞ்சிலையின்வாளியோடுகதைவேல்மழுக்கணையும்வீசினு
ரஞ்சிவிண்ணவர்கள்போய்மறைந்தனர்களகிலமெங்கணுமதிர்ந்ததே. (௧௮)

ஆனைதேர்கள்பரியெண்ணிலாதவைகளடரவந்தெதிருமாடவர்
சோனைமாரியெனவாளிதூவியுயர்தோமரந்தொகையில்வேல்மழு
வானுமாதிரமுமறையவீசமலர்மீதுமாதுளம்வருந்திடத்
தேனுகாசுரனைமுனியுமாதவவில்வளையவெங்கணைதெரிந்தனன். (௧௯)

அன்னமானநடையாளையஞ்சலெனவோதியாழியுறுமாழியான்
மின்னுமாமுகில்விளங்கிநின்றதெனமேவிவாளிமழைவீசவே
மன்னரானவர்களிரதமோடுதரைமறியவெம்பரிகள்மதகரி
யுன்னுபோதின்முனுருண்டசெங்குருதியுவரியாகுமெனவோடவே. (௨௦)

சிலையினாணினொலியுலகமேழுமுறவேகவாளிகள்செலுத்துமா
மலைகள்போலவருகரிகடேர்கள்பரிவளையவந்தெதிருமறவர்தந்
தலைகள்வானமிசைநிறையநீடுமுடறரணிவீழவனைதானென
வலைகொள்வேலையிடையுதிரவாரிவிழவலகையுங்கழுகுமாடின. (௨௧)

சுற்றுமேவுபரிகொண்டுசூழுமவர்தூயவெங்கள்குலமானினைப்
பற்றியேகுமறிவற்றவாயர்குலம்வந்தவன்பயமுறக்கடி
தெற்றுவீர்களெனவந்தெதிர்த்தவர்களொன்றடர்த்தவனெய்வாளியா
லற்றசென்னிமாமகுடமின்னவுயரண்டமுற்றவையனந்தமால். (௨௨)

வேறு. சிலையினூடுஞாணினோசையேயொளிர்செகமுழுதும்வீடுகாலமாமெனு
மொலிகளெழநாடியோடுசாயகமுருளிரதமேவிநேருமாடவர்
தலைகளறஞாலமீதின்மாவொடுசரியினலவேழம்வீழமாசற
விலகிநிறைவாரிதோறுமேகினவிடையர்குலதீபவீசனேவவே. (௨௩)

அதிரதர்கள்மாளநீளுமாகரியடையவுடலோடுகோடுதாளற
வுதிரரதமூருமாவலோனுமெய்யொடியநிரைவாசிநாசமேயுற
வெதிரிலழல்வாளிவாளின்மாமுகிலிரியவுயராசைதோறுமேகின
சதுரன்வசுதேவன்வாழவேவருதனையன்விலின்மாரிபோலவீசவே. (௨௪)

முரன்முரியமோதுமாலினார்கணைமுடுகவுயர்போகுமாவோடானைகள்
வரைவிழுவபோல்மீதின்வீழ்வுறமணிமுடிகள்சூடிவாழும்வீரர்கள்
சிரநெரியவாளமூளையேபடிதிரளவிழிவீழநாவும்வீழ்வுற
வுரநெரியநாசிவாயினேவுறவொடிவருடலோடுதோள்கடாள்களே. (௨௫)

கொடிகுடைகள்வீழவாசிமாகரிகுடர்புரளவீரர்தேர்கடாளற
முடிகளறமார்புமாரமோடறமுசலமறவேல்கள்வாள்கடானுதிர்
பொடிகளுறவிழ்வதேர்கள்பாரிடைப்பொறிகளுறவாசைதோறும்வாணமு
மிடியுடையனுடியோடுமாசுகமெறிகடலுள்வாழுமீசனேவவே. (௨௬)

அடியறுவதேரினணிதானறவடியடுவபேரிகாளமோடிறு
துடியறுவவூறுவாசிநாசிகடுடையறுவவானின்மேகமேலமர்
கொடியறுவமோடுகேடியேயொளிர்குடையறுவகோலமானமாமணி
முடியறுவவீரர்தோள்கடாளறமுடுகுகணைமாயனுபனேவவே. (௨௭)

சுதைதருவமாதுநாதனேவியதொலைவில்பலவாளிசோனையாமென
வுததிகனலாசமூனுமாகரியுருளிரதம்வாசிமாளவோடுவ
மதிதவழும்வேணியானன்னூர்புரமடியவெரியாகனூறும்வாரென
வதிதிமிலகோலகாலமானதவரசர்திரளாசைதோறுமோடவே. (௨௮)

தலையறுவர்மாவினேறுசூரர்கள்சரியிலுயர்தேரினேறுமாடவர்
சிலையறுவர்பாழிவாசிகாலொடுசிரமறுவமாறிலாதமாகரி
சூலமறுவவீரரானபேரினர்குலைகுலைவர்பீதியோடுமோடுவ
ரலையுறுநல்வாரிமீதினுகணையமருமருளாளன்வாளியேவவே. (௨௯)

அவனிதனில்மேவுதேர்கொடானைகோடதிரவருசூரர்சூழவேயறை
பவனனிலும்வேகமானமாவோடுபடைஞர்திரள்கூடிமூடினூர்தலை
குவைகள்முகிலோடுசேரமீதுறுகுருதிநனியாறுபோலவோடின
துவரைநகராளும்வீரனுமிறைதொலைவிலெயும்வாளிமாரிதூவவே. (௩௦)

வேறு. ஆரியன்றனுவுந்துறமண்டினவாசையம்புவியண்டமுமிண்டிய
வாரியெங்குமலிந்தனவெங்கரிமாவினின்றுடர்வஞ்சர்மடிந்தனர்
பாரினெங்கும்நிறைந்தெழுசெம்புனல்பாரவங்கதுகண்டனர்விஞ்சிய
தேரர்வந்துநெருங்கியடர்ந்தவர்சீறிவெங்கணைசிந்தினர்முந்தியே. (௩௧)

சூரர்விஞ்சிநெருங்கினர்வெங்கணைதூவிவந்தடர்ந்திடமுந்திய
பேரிபம்பைகறங்கிடமங்குல்கள்பீதிகொண்டுபெயர்ந்தனசங்கொடு
தாரையெங்குமுழங்கினவண்டர்கடாமுமஞ்சினர்கண்டிமுதுண்டன
வீரனம்புபொழிந்தனன்வஞ்சகர்வீறழிந்துயர்விண்டலமண்டவே. (௩௨)

தானுடன்றலையுந்தலைதும்பிகள்சாயவங்கம்நெரிந்தனவெம்பரி
தோள்சிரங்கரமுந்துடையுந்துணிசூரவன்பினரென்பினுடன்றசை
மூளையுந்தியெரிந்தெழுசெம்புனல்மூரியம்பரமஞ்சமுழங்கின
வேலையன்பொடுதந்தவனின்றெதிர்வீசுவெஞ்சரம்நஞ்செனவிஞ்சவே. (௩௩)

வீறியெங்குமடர்ந்துமிடைந்தொளிர்வேல்முசுண்டிகைகொண்டுயர்குண்டையி
னேரியஞ்சவெறிந்தவர்வன்றலையேகவம்பரமம்புவிசெம்புன
லூறிவந்தலைமுந்துகருங்கடலோடமண்டிடுகெண்டைகளுண்டிட
றேறவிஞ்சமில்கஞ்சமின்விஞ்சியதேரினின்றரிசிந்தினன்வெங்கணை. (௩௪)

வாரணங்களின்விஞ்சியெழுந்தவர்வாசியுந்திரதங்களின்வந்தவர்
பாரணங்குமெலிந்திடவெம்பரிபாயமுந்திநெருங்கினர்வென்றிகொ
டாரணங்கியகுஞ்சியர்வன்றிறல்சாரவந்தவர்தந்தலையிந்திர
னாரணங்கிடவெங்கணும்வெங்கணையோடவுந்தினனும்பர்கடம்பரன். (௫௫)

வேறு. விண்டாரகையண்டிப்படிவீழ்ந்தலைமிடைய
வுண்டாகியகரிதேர்பரியுடன்வீரர்களுருளப்
பண்டாலிலையமர்வோன்விடுபகழித்திரள்பரவக்
கண்டானுயர்விதற்பன்றிருமகனாகியகடியோன். (௫௬)

ஒருதேரினிலிவன்வெஞ்சிலையொன்றேகொடுபொழிவான்
பரிமாகரிபடைவீரர்கள்மடியக்கணைபரப்பிப்
பொருமாறதுநலனாமெனப்புகலாநகைபுகையா
வெரியாவுறவிரதந்தனைமுடுகின்றனனெதிரே. (௫௭)

மலைபோலுயர்கதிராமெனமகுடத்தொடும்வருமா
லலைவேலையின்விடமாமெனவிழியாலனல்சொரிவான்
சிலைநாணுறுமொலியாலுலகுலையச்சிகியினைநேர்
கொலைவாளிகள்பலவுங்கொடுகொதியாவெதிர்வருவான். (௫௮)

படிவானகம்வெருவக்கடலிடையேபணியுமிழும்
விடமாமெனவிறுகாலையின்விடைமேல்வருமரனார்
வடிவாமெனரதமேல்வருமலைநேருருக்குமனென்
கொடியான்ககபதியாலுயர்கொடியானுடன்கூறும். (௫௯)

வெண்ணெய்க்கழுதடியுண்டுநெய்திருடித்திரிவிரகா
கண்ணிக்கயிறுடனேகழிகோலுங்கொடுகானி
னண்ணித்தனையுழல்வாயெமதுயிராகியநலமாம்
பெண்ணைக்கொடுகளவிற்பெயரிடையாபிழைசெய்தாய். (௬0)

விட்டேகுதிமடவாடனையல்லேயெனில்விடமாய்ச்
சுட்டேகுவகணையாற்சிலைதுணித்துன்னிருகரத்தைக்
கட்டேனென்னினின்றுடொழுமடியார்கழலிணையிற்
பட்டேயுறுதுகளாகுவனெனவேசிலபகர்ந்தான். (௬௧)

எரியாயெழவிருகண்ணினுமிமையோர்களும்வெருவத்
தெரிவாளிகள்கொடுவெந்துயர்சிலையான்சிலசபத
முரையாவதிருறுமேறெனவுருடேர்மிசையுயர்ந்தான்
னருளார்வசுதேவன்சுதனகையோடிவையறைவான். (௬௨)

வீரற்குறுநல்வாசகம்விரித்தாயறிவிலியுன்
றேரற்றுயர்கொடியெற்றெழிற்சிலையற்றிடச்செல்லுங்
காருற்றெழுசுடர்வாளிகள்கலவாமுனமினினீ
பாரிற்குதிகடிதேதோடெனப்பரமனுரைபகர்ந்தான். (௬௩)

அரியாகியமுதலோனிவையறையுமுனரழல்கண்
ணெரியாயுறமுனிவானுயர்சிலைநாணொலியெழவே
விரிவாகியகடல்மாதிரம்நிறையப்படிமிசையின்
சொரிமாரியினதிகத்துருசுடராசுகஞ்சொரிந்தான். (௪௪)

வேறு. அத்திக்கொம்பைக்கொண்டனுமோதியபறல்சால்பா
லத்திக்குளமின்னுக்கடல்செய்யச்சுதனிற்கு
மத்திக்குச்செல்வீரவிதற்பன்மகனாகத்
தத்திப்பூணாறும்பிறையேயலவழல்கின்றான். (௪௫)

குஞ்சரம்விஞ்சுங்குண்டினமாபுரியாளுங்கோன்
வெஞ்சினநெஞ்சன்வில்கொலைவேலையிடையெய்தும்
நஞ்செனவெஞ்சிலைவெங்கணையெங்கும்விடநந்தன்
மஞ்சனுமஞ்சுவாளிகொடெய்தானவைமாற. (௪௬)

அஞ்சுமுகத்தானுமெனவெய்தியகல்வாளி
னஞ்சுமுகத்தானோடுடனாகக்கணையெய்தா
னஞ்சமுகத்தான்ககபதிபடைகொண்டவைநூற
வஞ்சுமுகத்தானுயினன்வானத்தவராட. (௪௭)

புண்டரிகம்போல்வெம்பியபஞ்சானனமேபோற்
புண்டரிகம்போல்வந்தவிதற்பன்புதல்வன்சீர்ப்
புண்டரிகமின்னுபகன்வில்லார்ப்பொலியாற்றான்
புண்டரிசத்துக்கொத்தசரந்தோள்புகநொந்தான். (௪௮)

கொடியானெஞ்சன்வஞ்சங்கொண்டான்கூற்றென்ன
வடியாலேபார்வானுமடங்கவளவேகொண்
ணெடியோன்மார்பிற்புண்படவெங்கும்நிறைவாளி
நொடியோர்போதினெய்தனன்விண்ணோர்மனம்நோவ. (௪௯)

வேறு. காற்றொப்பனவிடமொப்பனகனலொப்பனகடியுங்
கூற்றொப்பனவிடியொப்பனகொடியாமுமைகொழுநன்
சீற்றத்தினுமடர்வெங்கணைவிதற்பன்சுதன்சிதற
நீற்றுக்குவைபடவாழியினறுத்தானெறிவளர்த்தான். (௫0)

பார்த்தான்விடுபடையாவையுமுறியக்கடும்பகழி
ஆர்த்தானுயருலகியாவையுமிமையோர்களுந்துலங்க
வார்த்தானொளிர்வளைபூரினனுமெய்த்துழவிடையா
கீர்த்தாயெனிலரசாகுதியெனவேகனற்கண்ணன். (௫௧)

தீயோன்விடுங்கணையாவையுமறவேசிலைபகழி
மாயோன்விடுவதுகண்டெரிமறவன்சிலையதனாற்
றூயோன்மிசைநூறாயிரவரிவாளிகடுரந்தான்
பேயாகியதாயாருயிர்நுகர்ந்தானவைபிழைத்தான். (௫௨)

கொதித்தானுளங்கொடியோனவனுறுவெங்கணைகொடிதா
னெதிர்த்தேசிலைவிடுத்தானவைதுவராபதியிறையோன்
சிதைத்தேயவனகல்மார்பிடையுறவாளிகள்செலுத்தப்
பதைத்தானுடல்விதற்பன்றிருமகனாகியபதகன். (௫௩)

உருமேறெனமுனிவானுருக்குமன்பாருலகெவையுஞ்
சருகாயிடத்துரந்தான்கதிரவன்வெம்படைதனையே
கருமாமுகிலனையானுமப்படைகொண்டொருகணத்தி
னெறியாவுறவிடுத்தானவையறவார்த்தனரிமையோர். (௫௪)

துரந்தான்சிலசுடர்வெங்கணைதூயோனவைதுணிக்க
வெறிந்தான்மனமியமன்படையெடுத்தானுலகெவையு
மரிந்தேயுறுமிதற்காற்றலையெனவிட்டனனழிகார்
குருந்தேறியவிளையோனதுகுறைத்தான்கொடும்படையால். (௫௫)

விடமாமெனக்கதமல்கிடுவிதற்பன்றிருமகனுங்
கொடியானயனழிக்கும்படைசிலைநாணுறக்குனித்தே
யிடையாவிதுதவிர்ப்பாயெனவிடுத்தானுலகெறியக்
கடல்மீதினிலடைவானுமப்படைகொண்டவைக்கரந்தான். (௫௬)

கனைந்தானிவன்மலரோன்படையெனவங்கதமுறுநெஞ்
சனைந்தானுயருலகியாவையுமிருகாலையினொடுங்க
வளர்ந்தாரழல்விழியாவெரிமடுப்போன்படைவாங்கித்
தெளிந்தான்வரிசிலைநாணுறத்தொடுத்தான்செலவிடுத்தான். (௫௭)

காற்றுங்கொடுங்கனலுஞ்சுடர்க்கணையுங்கடுவிடமுங்
கூற்றும்பிறையெயிற்றேறெழுகூளிப்படைபலவுஞ்
சிற்றமுறுங்கரும்பூதமுமாவுஞ்சிதையாத
வூற்றமுறவொளிர்சூலமெவ்வுலகெங்கணுநிறைய. (௫௮)

கடல்வற்றிடவரைமுற்றவுநெரியக்ககனம்பா
ரிடருற்றிடவுயிருட்கிடவருநாற்றிசைமதமா
மிடலற்றிடவெயில்மட்கிடவிபுதக்குலம்வெருவ
வுடுவுட்கிடநிலனுற்றிடுமுரகக்குலமுலைய. (௫௯)

விடையுற்றவர்படையெங்கணும்விரிவெங்கனல்பரவத்
துடியொத்தமெல்லிடைமாமடவனமுமனந்துலங்கக்
கடலுற்றமரரிதேவியைக்கலங்காதுமின்னென்றே
சுடருற்றெழுமரனற்படைவிடவங்கவைதணித்த. (௬௦)

ஆர்த்தாருயரெழில்வானவரவர்மாமலரவனி
தூர்த்தார்கடற்றுயினீங்கியமுகுந்தாவெனத்துதித்தார்
பார்த்தானுருக்குமன்வெஞ்சினம்பெருகப்பலபகழி
சேர்த்தேசெலவிடுத்தான்றிருமாறேருள்சிவப்புறவே. (௬௧)

விடும்பல்லவம்புயமீதுறவிதற்பன்றிருமகன்றன்
கொடுவெங்கணையமர்தூணிவில்லிரதங்குறகதமும்.
மடியும்படிகவசத்தொடுமணிமார்பமுமுருவச்
சுடர்வெங்கடும்பகழித்திரள்மதுசூதனன்சொரிந்தான். (௬௨)

திருமாலிறையரிகேசவன்சிலையால்விடுபகழி
வருமாமலையெனத்தன்னுடல்நுழைந்தோடிடமாரன்
விரிவாயெழுங்குருதிப்புனல்நிலன்வீழ்ந்திடமெலிவோ
டுருளாரழிந்திடுதேர்மிசையயர்ந்தானுருக்குமமன். (௬௩)

அயர்வோடழிதேர்மேல்விழுமரசாமுருக்குமனுக்
குயிர்போகிலதுய்வானிவனுயர்மாமலர்த்திருவே
துயர்நீயினியொழிவாயெனமொழிந்தான்சுரர்துதிப்ப
வெயிலோனெனவொளிருமணியிரதந்தனைவிடுத்தான். (௬௪)

கடலிற்கடுங்காலிற்கழியும்மாமரக்கலம்போற்
படியிற்றிகழ்வுறுதாருகன்பரிகோல்கொடுகொளுவு
முடுகக்கொடியுயரத்தனிமுதலோனவர்முன்பால்
வடிவத்தொளிர்பலபத்திரவரராமனும்வந்தான். (௬௫)

பரியேறெனவரவேயுயர்பகடெங்கணும்நிறையத்
திரளாயுருளிரதஞ்செகதலமீதினிற்றிகழ
வரியாமெனவருபூரல்வணணலைவேலையினமருங்
கருணாகரன்கமலாசினியுடன்போனதுகண்டான். (௬௬)

மின்னேறுயர்தேர்மீதினில்விடையோனிடர்கடியும்
பின்னோன்வருமெழில்கண்டனனுவகைக்கடல்பெருகு
முன்னோன்றிகள்பலபத்திரராமன்முகிணகையான்
றன்னுவலினிரதத்திடையடைந்தானுயர்தவத்தோன். (௬௭)

பலபத்திரராமனெனுமுன்னோன்வரப்பரம
னலர்மத்தியகமலத்திணையடிவீழ்ந்திடவவனு
மலையொத்துயர்புயவீரனையணைத்தான்மலர்மகளாஞ்
சிலையொத்தமர்நுதலாடொழமகிழ்ந்தான்றிருவுளத்தே. (௬௮)

தேருங்கரிநிரையுந்திரள்பரியுஞ்சிலைவீரர்
பாரும்வெளியிலதாயவர்ப்படைமன்னர்கடொழவே
காருந்தியகலுழக்கொடியெழுமாழையின்கலசத்
தேர்கொண்டணைமுலைபாவொடுமினிதேகிடுமெல்லை. (௬௯)

வேறு. ஆறுபோல்வளைத்துறுசெங்கணை
யூறுமார்பனுருக்குமனோர்நொடி
மாறுபோதிற்றெழுந்துமடங்கல்போற்
சீறினன்கண்ணன்சென்றனனேமென. (௭௦)

சுற்றும்பார்த்துச்சுசியுறுகண்ணினான்
பெற்றமெய்த்தவன்பெய்வளைதன்னொடு
மற்றம்பார்த்தகன்றானவன்றன்னையா
னொற்றுவனெனப்பின்றொடர்ந்தேகினான். (எக)

இரிந்தசேனையையஞ்சலீரென்றுரைத்
தெரிந்தநேத்திரன்றேரினினேறினான்
றெரிந்தவார்சிலையேந்தினன்றிக்கெலாம்
விரிந்தமாக்கடல்போலவெகுண்டுளான். (எஉ)

மின்னினோடுயரியாதவன்விஞ்சுதேர்
தன்னிலேகுவமுன்னந்தடுப்பனென்
றன்னுபோதின்முன்னுற்றனவெம்படைச்
சின்னமூதிடச்சேனைகளார்க்கவே. (எங)

பிடித்தவெஞ்சிலையன்பிறழ்வன்னியன்
கடித்தபல்லினன்காய்கனற்கண்ணினன்
வெடித்தசொல்லினன்யாதவமீளெனத்
தடுத்தனன்கமலத்தடங்கண்ணவன். (எச)

இகல்புரிந்தங்குருக்குமனேகலு
மிகமுனிந்துயர்விற்கரத்தேந்தியே
மகதனுந்தந்தவக்கிரமன்னனுந்
தகுதியிற்சிசுபாலனுந்தாக்கினார். (எரு)

தோலினம்பரிதேர்விரைசூழ்ந்திடச்
சாலுவனடர்த்தானழற்கண்ணுடைக்
காலனஞ்சிடவேகதமிக்கிடுஞ்
சீலமில்லப்பவுண்டரன்சென்றனன். (எசு)

உருக்குமன்னமர்மீளவுடன்றன
னெருக்குதாற்பரிநீள்கயந்தேரிற
முருக்குவனெனமூவுலகங்களும்
வெருக்கொளும்படிமேயினன்பால்வண்ணன். (எஎ)

அலாயுதத்தனடர்ந்தெழும்வேலையி
னிலாவுதிக்குநெடுங்கடலாமெனப்
புலாலலைத்தலையிற்பொடியாகவே
மெலாருமென்றுநற்றேர்கொடெதிர்த்தனர். (எஅ)

கோதில்யாதவர்கோனனிகந்திரைந்
தோதவேலையொலியெனவார்த்தனர்
தீதினால்முயல்மன்னவன்சேனையு
மோதுமாபரித்தேருடன்மூண்டனன். (எகூ)

அதிர்ந்தபாரமிர்நாசனரஞ்சிட
வுதிர்ந்துவீழுமுடிக்களுமேற்றிடப்
பிதிர்ந்துமால்வரைவீழப்பெருங்கட
லெதிர்ந்தபோலனிகமெழுந்தார்த்தன. (அ0)

கரிகளோடுகரிகளுங்காதின
பரிகளோடுபரிகளும்பாய்ந்தன
வுருளுதேரொடுதேரினமுற்றன
வரிகொள்வீரரும்வீரருமார்த்தனர். (அக)

எதிருமாரதரொண்ணிலரெங்கணுங்
கதிர்கொள்வேல்மழுக்கன்னகங்காலவே
வதிரவீசிமுடித்தலையற்றன
ருதிரமாரிதனையினினோடவே. (அஉ)

கதையினாலடர்வாருறுகாலன்போ
லெதிருவாரொளிர்வாளினரெங்கணுங்
குதிகொள்வார்கரிகொன்றிடக்குன்றுபோற்
சிதைகுவாருயிர்சாதகர்சேற்கவே. (அங)

சிலையறக்கொடிதானறத்தேரற
மலையெனக்கதிர்வாளொடுமாகரி
தலையறத்துணிசெய்தெதிர்தாக்குவா
ரலையுறப்பொருமார்கலியென்னவே. (அச)

எரிவிளித்துருடேரினெதிர்ந்துளார்
பரிபடச்சிலைநாணறப்பாகர்தன்
சிரமறக்கணைமாரிகள்சிந்துவா
ரரியெனத்தரைமீதிழிந்தாற்பரால். (அரு)

இருளுமாகரிவீரர்களெங்கணும்
வருவராலிடமும்வலமுமுறப்
பொருவர்வாளிபொழிந்துபுவியின்மே
லுருளுவார்படியின்னுதிர்முகம். (அசு)

ஆடகங்கொள்வரையெனவார்த்தெதிர்
கேடகங்கதிர்வாள்கிட்டவெட்டியே
வீடகங்கணமின்னவரம்பையர்
சூடகங்கடலங்கவளைத்தனர். (அஎ)

கற்றகற்றபடைகொடுகையினு
லெற்றியுற்றிருவோருமிறந்துற
வெற்றிமுற்றினரென்றுவிண்மாதரார்
பற்றிநற்றியணைத்துப்பரிந்தனர். (அஅ)

உருண்டதேர்கள்பரியுமுருண்டன
வுருண்டமாகரிகோட்டுதிர்முத்தின
முருண்டவீரர்முடிகளுவரியி
னுருண்டுவீழ்ந்தனவோடினசெம்புனல். (௫௯)

தவந்தனுலுயர்வாளினர்தாக்கிமெய்
சிவந்தசோரிவிளவுயிர்சேரவிண்
ணுவந்தகாரியருற்றனைத்தார்படி
கவந்தமாடினகூளிகளிக்கவே. (௬௦)

மூவராகிமுளைத்தெழுமூர்த்தியோ
னேவலேலவருவீரர்களியாவரும்
பாவகாரிவருதிணிபாரிடத்
தேவர்தானவர்போரெனச்செய்தனர். (௬௧)

எதிர்ந்துமெய்துமெழுமழுத்தண்டுகொண்
டறைந்துமெண்ணிலராடவரார்த்திடத்
தறிந்துவெங்கரிமாவுடன்சாய்த்திட
முறிந்துருக்குமன்முன்னருமோடினர். (௬௨)

குஞ்சரங்கள்மறிந்திடவெகுலைந்
தஞ்சிமன்னர்களோடியலைவுற
வஞ்சநெஞ்சனுருக்குமனுமனம்
வெஞ்சரங்கொடுவந்துவிலக்கினான். (௬௩)

பேரிமாமுரசம்விண்பிளந்திடு
மாரவாரமடைந்துரவார்கலி
நீரெலாந்துகளாகவிலநெய்துந்
தேரின்மேல்வருஞ்சியமும்போலுவான். (௬௪)

பூணிறைந்துபொலிந்திடுமார்பினான்
சேணிறைந்துயர்தேவர்திடுக்கிட
ஆணிறைந்தவுயிர்களுமுட்கிட
நாணெறிந்துலகெங்குமடுக்கினார். (௬௫)

யாதவப்பெருஞ்சேனைகளெங்கணும்
பீதியுற்றுநிலைத்திற்பெயர்ந்திட
வேதனுமனமுட்கிடவெண்சங்க
மூதினானுலகங்கடுலங்கவே. (௬௬)

தெரிந்தனன்சிலையிற்கணைதிக்கெலாஞ்
சொரிந்தனனிமையோர்கடுணுக்குற
வெரிந்திறந்தனயானைகடேர்பரி
முரிந்தமன்னர்களோடினர்முந்தியே. (௬௭)

துமிந்ததேர்கரிவீரர்கள்சேரவே
நிமிர்ந்தவாளியுதிர்த்தனிகத்துள
மமிழ்ந்து கூளிகடள்ளிதம்மார்பினிற்
றிமிர்ந்தழுஊகளெங்குஞ்சிதறவே. (கூஅ)

ஆனைபட்டனதேர்நிரையற்றன
வீனமிற்பரிவீரர்களியாவரு
மூனுமற்றெனரோடியசெம்புனல்
மீனுடைக்கடல்வீழ்ந்தலைவீசிய. (கூகூ)

உருக்குமன்சிரமொன்றனலாமென
நெருக்கிவெம்பரித்தேர்நிரைநீள்கயம்
வருக்கமுமறவந்தெதிர்வீரர்கள்
செருக்கறச்சிரந்தானறத்தியக்குமால். (க00)

ஆலமாமெனவாரழலாமெனக்
காலனுமெனக்காந்துமுருக்குமன்
சூலிமார்புரஞ்சுட்டனசெய்கைபோற்
கோலயாதவன்சேனையைக்கொன்றனன். (க0க)

குண்டினபுரிக்கோன்செய்தவீரியங்
கண்டுசேதிபன்றன்னுடன்மாகதன்
மண்டலீகரெண்சாலுவமன்னவன்
கொண்டல்போற்கொலைவாளிகுனித்தனர். (க0உ)

வீரனைவிதந்பன்றிருமகன்
கோரமானகொடுங்கணையேவவே
சூரரானவர்அஞ்சினர்மற்றுளோர்
பாரினோடினர்பால்வண்ணன்காணவே. (க0௩)

உவப்பின்மெய்ம்படையாருயிரும்பரின்
றலைப்படைக்கணைசார்வுறக்கண்டன
னலைப்படுத்திருப்பாற்கடலாம்வண்ணன்
கலப்பைகொண்டெழுந்தான்கதிரஞ்சவே. (க0௪)

விதற்பராசன்படைத்தலைவீரர்கள்
பதைப்பநீடுபகடிறத்தேவர்க
டுதிப்பவாரிதுப்பாகச்செஞ்சோரிவீழ்ந்
ததைப்பநீளலத்தினடித்தானரோ. (க0ரு)

வேறு. பிளந்தனதகர்ந்தனபெருங்கைமதவேழம்
உளைந்தவிவுளித்திரள்களென்புமொடியுற்றே
யளைந்தனர்கள்மன்னர்துடைகாலரைகளற்று
வளர்ந்தனபிணக்குவைகள்மால்வரைகள்மான. (க0சு)

முறிந்தனதகர்ந்தனமுரண்டருமணித்தேர்
மறிந்தனபுரண்டனமதக்கரிகள்கைகா
லறிந்தனருருண்டனர்சகத்தலைவர்நீதி
யறிந்தவனலங்கையினெடுத்துரையவம்மா. (க0எ)

வில்லினர்கள்வாளினர்கள்வேலினர்கள்வீர
மொல்லையிவர்தாள்கள்கரமென்புகமொடிந்தார்
பல்லொடியவாசிகள்பதைத்தபகடிற்ற
மல்லினுயர்தோளினன்வலங்கொடலமோத. (க0அ)

பரித்திரள்படைத்தலைவர்தேர்கள்பழுதற்ற
கரித்திரள்பதைத்திடவலங்கொடுகணைத்தி
னெரித்தனனுடற்குருதிநீர்கள்வரமேவக்கொண்
டளைத்தனனிலத்திடையுருக்குமனுமஞ்ச. (க0கூ)

கோடொடியுமாகரிகள்வாசிகள்குலைந்தே
விடவடிவேலினர்மடிந்திடவெகுண்டு
சாடினனலாயுதமெடுத்தனையவன்பா
ரோடியதுமானதியெனக்குருதியுற்றே. (கக0)

பிடித்துநிலனெற்றுவமெனச்சிலைபிதற்றி
யடர்த்தவர்வெருக்கொளவலங்கொடுசுழற்ற
புடைத்தனனெரித்தனனுடற்குருதிபொங்கப்
படுத்தனனெருக்கியபடைத்தலைவர்பம்ம. (ககக)

பக்கமெதிர்மண்டியபடைத்தலைவர்பாரி
னுக்கிடவலாயுதனடித்தனனுருத்தே
மிக்கவர்களோடினர்கள்வாய்குருதிவீழக்
கக்குவர்கள்பாருழகலப்பைநெறிகாணின். (ககஉ)

மண்டனில்மடிந்துமதமாவினர்கள்வீழக்
கண்டுமகதன்கொடியகாலனும்நடுங்கக்
கொண்டல்கள்முழங்குவதெனக்குரல்வெடிப்பத்
தண்டுகொடடர்ப்பவெதிர்தாக்கினனலத்தான். (ககங)

வாரியயமற்றிடவிளித்துமலைபோலே
பாரதிரவெண்டிசைசுமந்துபகடஞ்சச்
சாரிகைதிரிந்தனர்தடித்தனரடித்தா
ராரிவனையொக்குமவரென்றமராட (ககச)

உரனுடையபால்வனனுறுச்சிமகதன்றண்
டிருபிளவதாகவலமேகொடெதிர்மோதி
வரையினிடிவீழ்வதெனமார்பிடையடிப்பத்
தரையுறவிழுந்துபினரோடிமெய்தளர்ந்தான். (ககரு)

சேதிபனடர்ந்துவைகிலீமுகம்விடுத்தே
மாதிரமறைப்பமதிமன்னனுமலத்தா
லேதலர்நடுங்கவிரதந்துகளதாக
மோதுதலுமோடினன்முராரிமகையெய்த. (௧௧௬)

விக்கிரமமிக்கவிடையோனெனவடர்ப்ப
வக்கிரன்மணிக்கதைதொடுற்றவமர்சாஞ்சிற்
கைக்கயிலையொத்தசடவுட்கடுகடுப்ப
வுக்கிரபலப்பெயரோனிந்தவணிடைந்தான். (௧௧௭)

காலனெனவான்மறையவெங்கணைசொரிந்தே
சாலுவனடர்க்கவொளிர்சங்குதிறவண்ணன்
சிலமில்தேரினையலங்கொடுசிதைப்ப
ஞாலமிசையோடினனகைத்தனர்கள்வானோர். (௧௧௮)

காலன்விழுமார்பினுதைகாவலர்வரத்தால்
மாலுருவமாகியபவுண்டரன்மணித்தண்
டாலமர்துடங்கலுமலாயுதனடிப்பக்
கோலமுடிபாரின்விழவோடிமெய்குலைந்தான். (௧௧௯)

அடர்ந்தமகதன்முதலினோர்கள்மிகவஞ்சித்
தொடர்ந்தெழுமலாயுதனடிக்கமெய்சுருண்டு
மடைந்தவுடல்மீனெனவுழன்றனர்கலங்கி
யுடைந்தவர்களோடிடவுருக்குமனுருத்தான். (௧௨௦)

வெஞ்சிலையினொணலிவிசும்பினுறுவிண்ணோ
ரஞ்சவெதிர்முந்திவருமாலவிடமென்ன
விஞ்சுநெடுவாளிமழையெங்கணும்விடுத்தே
வஞ்சகனுமூதினன்வலம்புரியைமாதோ. (௧௨௧)

குண்டினபுரத்திறைவன்விட்டகொடுவாளி
யெண்டிசையுறக்கனல்மடுத்தெதிரவார்த்தான்
கண்டபர்கலப்பையைசுழற்றிவருகாளை
யண்டர்கடுத்திடமுறிந்தவவையெல்லாம் (௧௨௨)

விட்டகணையற்றிடவெகுண்டுடுவிதர்ப்ப
னெட்டதிசைமுற்றுலகியாவையுமடங்கச்
சுட்டனனெனக்கனலவன்படைதொடுத்தான்
சிட்டனுமலப்படையெடுத்தவைசிதைத்தான். (௧௨௩)

வெம்பினன்விதர்ப்பனருள்வீரனும்வெகுண்டே
யம்பரமிறைத்திடவையாசகம்விடுத்தா
னம்பனிடமாக்கழியுமாரணன்முன்னோனு
மும்பர்கள்மதித்திடுகலப்பைகொடுதிர்த்தான். (௧௨௪)

எழுந்தமுகில்போற்சரமிராமன்மெய்யழுந்தப்
பொழிந்தனனுருக்குமன்விழிக்கனல்கள்பொங்க
வழுந்துருளுமுன்னிரதமாவினொடுபாக
னழிந்திடவலங்கொடுடைந்துறவடித்தான். (கஉரு)

அதிர்த்தெழுமலாயுதனடிக்கவழிதேரோன்
குதித்தனனிலத்திவிடைகுண்டினபுரிக்கோன்
பதைத்தெழுமனத்தரியின்பால்வணர்தம்மேலே
யெதிர்த்தனனமணிக்கதையெடுத்தெரியுநெஞ்சன். (கஉசு)

முட்டினன்விதற்பனருள்மைந்தன்முனிவெய்திக்
கிட்டினனலத்தொடுகிளர்த்தினனிராம
னட்டமொடுசுற்றினரடித்தனர்களார்த்தே
கட்டினரிடிப்படமுழங்கினர்கலங்கார். (கஉஎ)

உருக்மனவடித்திடுவரோடிடுவர்விண்ணோர்
வெருவுறவதிர்த்தவனிமீதுபலசாரி
திரிவருல்குட்கிடவிழித்திடுவர்செத்திப்
பெருகிடவடர்ப்பருயர்பின்னுகனுமஞ்ச. (கஉஅ)

ஆர்த்தனர்கலப்பையுயர்தண்டுகொடறைந்தே
கார்த்தனருறுக்கினர்கள்கண்களெரிகாலப்
பார்த்தனர்நகைத்தனர்படிக்குளவரெல்லாம்
வேர்த்தனர்திசைக்கனுறுவேழமுமழிந்த. (கஉகூ)

அதிர்ந்துசெகமுற்றவுமலைந்திடவடர்ந்தங்
கெதிர்ந்துறுவளாக்கிறையலங்கொடிறவெற்றச்
சதைந்தொருநொடிக்குமுனமேதரணிதானுற்
றுதிர்ந்தனவுருக்குமனடற்கதையொடிந்து. (கங0)

திருக்கறுபனைக்கொடியர்சீரியுயர்தண்டை
முருக்கவுமுருத்தெதிர்முளைத்துகவெரித்து
வுருக்குமனையுற்றிருகைபற்றியுயிரோய
நெருக்கினனுடற்குருதிவாயினிறைப்ப. (கஙக)

பிடித்திருகைபைக்கொடுபெருத்தகலமார்பி
னடித்தனனழற்பொறிகள்சிந்திடவலத்தோன்
படித்தலமெதிர்த்தொனிகள்பாதமுறவம்பொன்
முடித்தலைதனைத்திருகவேமுபதுவேலை. (கஙஉ)

கண்டனளுருக்குமணிகண்கள்புனல்சோர
மண்டனிலுருக்குமன்மடிந்திடுமனத்தான்
னண்டர்கடுதிக்குமுயரச்சுதனடிக்கீழ்
குண்டினபுரிக்கொடிபணிந்துசிலகூறும். (கஙங)

மன்னன்வசுதேவனருள்மைந்தவருளென்றன்
முன்னவன்மடிந்திடுதல்முன்னர்முடிக்ப்போய்
மின்னியவலங்கொடியர்வீரனைவிலக்கென்
றன்னமிகுதுன்பமொடலைந்திவையறைந்தாள். (கஉ௪)

சஞ்சமலரிற்றிருவிஞள்கயல்கொள்கண்ணி
இஞ்சகவிதட்கினரும்வாயின்மொழிகேளா
வஞ்சனனிறத்தரியலாயுதமெடுத்து
விஞ்சியவளைப்புயனைமேவியிவைசொல்வான். (கஉரு)

மாலவனும்நான்முகனுவாசவனும்வேலை
ஆலனுகர்வானெனினும்நின்றுடைமராற்றுர்
சீலமெயிலாதவனையோமுனிதிதேவர்
தாலமுறுகேதனவெவுலாதடார்ந்தான். (கஉசு)

சிங்கமிகலன்றனெறுசிறிபிடலாமோ
யங்கமுறநின்னடிபடிந்துபழிசெய்து
மிங்கிவனையுய்யவருளென்றனெடுமாயோன்
சங்குநிறவண்ணனடிதாழ்ந்திவையுரைத்தான். (கஉஎ)

வேலைதனில்மேவியமர்வித்தகன்விளம்பத்
தாலமுறுகேதனன்விடுத்தரணிமீதின்
சீலமறியாதுமுபதியவனுமோடச்
சாலநகையாவிபுதர்தண்மலர்சொரிந்தார். (கஉஅ)

வேறு. படியிலேபலபத்திரராமன்கை
யடியிலேவிழுந்தோடியவாண்னமயில்
கொடியன்மானமுறச்சினங்கொண்டன
னுடியினீள்கொடித்தேர்தனிலுற்றனன். (கஉகூ)

ஏகலாதுவில்லென்றிரதத்தின்மேற்
பாகன்மேலிலங்கும்பரிதன்னின்மேல்
வேகவாளிநிறைந்திடவீசினு
னாகமேலமர்வானும்நகைத்தனன். (கஙo)

எய்தவக்கணையாவுமெரித்திடக்
கொய்துருக்குமன்றன்கொடித்தேர்விழக்
கையினிற்சிலையுங்கவன்டமாயுக
மையுறுமெய்யரிகணையேவினுன். (கஙக)

புட்கொடித்திறலோன்கணைபொர்க்குமண்
ணுட்கிடப்பரித்தேர்வில்லுதிர்வுற
வெட்கமில்லவருக்குமன்மீளவுங்
கட்கமுற்றகரத்தொடுசென்றனன். (கஙஉ)

தேரிழந்துசிலையுமிழந்தவன்
பாரிழந்தொளிர்நாந்தகம்பற்றிவா
னாரழிந்தெனுமொலியுற்றிட
நீரழுந்தெருப்பெனநின்றனன். (கசங)

அதிரமான்றலைவேலையினலம்போ
லெதிரும்வீரவுருக்குமனைகொண்டெழுங்
கதிர்கொள்வாள்கரமீதினிற்கண்டமுற்
றதிரநீள்கணையேவினனுத்தமன். (கசச)

ஒல்லையிற்கதிர்வாளறவூற்றமு
மெல்லையிறகொடியோனிமைப்போதினின்
மல்லுறப்பொருவேனெனமாதவன்
செல்லுறற்கொடித்தேரினிற்பாய்ந்தனன். (கசரு)

தேரினின்றெளிர்சீதரன்மேனியை
யாரவாங்கிருகையினமுந்திட
வீரமில்மன்றழுவலுமியாதவ
வீரனன்றுகொலென்றுவிளம்பினான் (கசசு)

முட்டியாலமர்செய்துமுனிந்துதேர்த்
தட்டினேறிமெய்தன்னைத்தழுவிய
துட்டனானவுருக்குமன்சோர்வுறக்
கட்டினானிருகையினைக்கார்வணன். (கசஎ)

தேரின்காலுறக்கையிரண்டுஞ்சிறு
வாரினால்விசித்தேவிதர்ப்பனமகன்
சோரவீரமழித்துத்துளவணித்
தாரினானகைத்தான்றையனாணவே. (கசஅ)

இலகுவாள்வலையாழிகொண்டேந்துவா
னலகுவாளிகொடேசிகையைந்துற
வுலகுளோர்நகைசெய்யவுருக்குமன்
றலையையோர்நொடியிறசிரைப்பித்தனன். (கசகூ)

வில்லின்மல்லினின்வீசியவல்லனென்
றெல்லையில்மொழிகூறியனைவென்று
மெல்லியாடனைமீட்குவனென்றுமுன்
சொல்லிநின்றசொல்நின்றலைசூழ்ந்தவால். (கருo)

இன்னவாசகமோதியயாதவன்
மின்னுவாள்விழியாய்விதர்ப்பனரு
ளன்னமேயுன்றன்முன்னவனன்மையை
யுன்னுவாயென்றுரைத்துநகைத்தனன். (கருக)

பங்கம்விஞ்சவுருக்குமன்பார்மிசை
தங்கைகாணத்தலைசிகையைத்துறச்
சங்கமார்வணன்கண்டுதன்றம்பியாஞ்
செங்கண்மாலினைச்சேர்ந்திவைசெப்புவான். (கருஉ)

பணங்கொள்மாசுணப்பாயலுளான்றனை
யணங்கினோடுயராகவறநெறி
யிணங்கலாதசவையினைத்தாயெனப்
பிணங்கினாலணங்கைக்கொள்பெருமையான் (கருங)

கயிறுகொண்டுகைகட்டியதன்றிக்கம்
மயிரெலாமறப்பல்சிகைவைத்தபின்
னுயிரநாள்முனுகித்தவனுமெனுஞ்
செயலெனாய்ப்பிழைசெய்தனைநீயென்றான். (கருச)

துட்டனாகினுந்துன்மதியாகினுங்
கட்டனாகினுங்கற்புடைத்தேவியாம்
வட்டமாமதியானனமங்கைக்காய்
விட்டுமானகர்மேவுதல்நன்றென்றார் (கருரு)

பாசந்தானறுத்தான்பலதேவனு
மீசந்தியையெண்ணியசிந்தையான்
வாசமாமலர்மங்கைமுன்னோன்றனை
யர்சுளான்மதியென்றுமகற்றென்றான். (கருசு)

தோகைசுந்தரிமுன்வருந்தோன்றலை
நாகமீதமர்வானகையோடிகழ்
வாசவேசிலையுஞ்சிகையைந்தொழித்
தேசமாஞ்சிகையாக்கியியம்புவான். (கருஎ)

சங்குசக்கரன்தானுடையான்செய்த
பங்கமெண்ணலைபங்கயமங்கைநின்
றங்கைகொண்கன்றன்னென்றுந்தவிர்ந்திடா
துங்கமானகர்போயுறுவாயென்றான் (கருஅ)

நாணமேநிறைநெஞ்சினனல்விறற்
கோணவேகுண்டினாபுரிசென்றிலன்
காணலான்பரிதேர்கரியாவையும்
பூணலான்கலன்பொன்முடிதாமென. (கருகூ)

சக்கராதிபனென்றிடுந்தோறுந்தான்
கக்குவானுதிரந்தனைக்கண்டவர்
நக்குவாரெனநாணியக்காணிடை
புக்குளானுயர்போசகடன்னகர். (கசு0)

ஞானகந்தனிப்போசகடன்னக
ரானவில்லினில்வீரமுமஃகியே
தானிகழ்ந்திங்கறையுஞ்சபதத்தி
னூனிழந்தவுருக்குமனுற்றனன். (ககூக)

உருக்குமனுடைந்தோடியவாறெலாம்
பெருக்கவிங்குரைசெய்தனம்பெயுயிர்
நெருக்கிவெம்முலைநீரோடயிலுவான்
றிருக்கொளும்புயன்செய்கையைச்செப்புவாம். (ககூஉ)

(உருக்குமனபசெயப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம் சருஅஎ.)

## எஅ-வது. துவாரகாவதிப்படலம்.

தீவினையகலவைம்புலன்கள்செற்றுமெய்
நாவினிலரிகமோநாராணவென்றே
யாவுயயவனாயெடுத்தாளுக்காட்செய்வார்
சேவடியிணையிணைச்சென்னிசேர்த்துவாம். (க)

வேறு. உருக்குமனுடைந்தோடலுமும்பரோடயனும்
நெருக்கிவந்துயர்விசும்பிடைநிறைமலர்பொழிய
வரக்கர்துன்னவன்றிலங்கையாளறனிலான்
வரத்தின்செருக்கவிந்திடச்சிறிதோன்றிருவொடுஞ்சென்றான். (உ)

உறைந்தபேரிகைமுரசுகளமலையார்கலிபோ
னிறைந்தமாபரித்தேர்களுங்கரிகளுநெருங்கி
யுறைந்தபாரினுண்டுகளெழவொலிகடறிடராய்
மறைந்தமாதிரமாயவன்றேர்மிசைவந்தான். (௩)

வனைகள்சேர்ந்திடுசவரர்தம்மகளிமைமருவு
மிரலைகிடங்கண்டரவம்வல்லியமெண்கு
வருடையாவிதமயிடம்வெஞ்சினமுறும்யாளி
திரியுங்கானிடைச்சேர்ந்துமாதிருவுடன்மொழிவான். (௪)

வேறு. விழுமியபணிகளீன்றுதவவேரிலன்
கெழுமணியினங்களினொளிகிளர்ந்திடத
தழலெனவெருவிமண்டாடியேகுதித்
துழையினமோடுவகாண்டியொண்கொடி. (ரு)

குஞ்சுகளுடனுணாதுகோதியே
யஞ்சுகமுக்கழலடைந்ததாமெனக்
கிஞ்சுகமலரனலென்றுகிட்டிலா
தஞ்சியபறவைகள்காண்டியன்னமே. (௬)

விதமுறுகூட்டினுள்மேவித்தானிடு
மிதமுறமுட்டைகீழ்வீழ்ந்ததென்னநீள்
வெதிரினம்வெடித்திடவிளங்குமுத்தினைக்
கதுமெனக்கவ்வுபுள்ளினங்கள்காண்டியால். (௭)

பொடிச்சுடுசெட்டத்தினிற்பொருந்திவள்ளியி
னடிச்சுவடுறச்சுதமளாப்பில்கலவியங்
கெடுத்துயர்வரைமுழையிருளேக்கியே
கொடிச்சியர்பிரசம்வாய்கொளுவகாண்டிமின். (௮)

ஆழியினெழுந்தருணன்சோல்கொள
வாழியொன்றுடையதேரருக்கனஞ்சிட
வேழமன்றுரித்தருள்விமலன்மேனிபோல்
வேழமொன்றெரித்திடுங்கனலைக்காண்டிமின். (௯)

சினமுறுபணிபணைநிழலிற்சென்றிட
வினமுறுகருப்பைகளிரலையீட்டங்கள்
முனிவறவல்லியநிழலில்முந்திடக்
கனலரசாளும்வெம்பாலைக்காண்டியால் (௧0)

வேறு.

அருணமெய்யிடையமர்ந்தவெண்புள்ளிகணிலந்து
மருணமவரைமிசையினிற்றுள்ளியதவன்றே
ரருணன்மூழ்ந்தேவிடும்பரியுடனராழகை
யருளர்வந்தெழும்விழியுடையணங்குக்காண்டி. (௧௧)

வேலையினையமுகந்துயர்விசும்பிடையெழுந்தே
சூலுறைந்துநீர்சொரிந்திடத்திசைதொறுந்தோன்றிப்
பாலைவெம்மையாற்பயமுறப்பயோதரம்வெளுத்துச்
சீலமில்லவன்கொடையெனத்தேய்ந்தனபாராய். (௧௨)

ஈனமல்கியவுலோபியர்விபவத்தையெண்ணி
மானிலந்தனில்வறியர்போய்ப்பெறுதலைவனபோற்
கானறண்புனலென்றுசேர்விலங்குநீர்காணா
தூனுலர்ந்திடவுழல்வனவொண்கொடிபாராய். (௧௩)

இன்னவாறெலாந்திருவினுக்கியம்பியேயிறைவன்
றன்னிலேவபினமிடைந்திடவதின்வயிற்றென்றும்
வன்னிவாருறக்கொழுந்துவிட்டெரியுமாவனத்தை
மின்னுநேமியனிரதமேல்விரைவினிற்கடந்தான். (௧௪)

கன்னல்முழையாசினிதந்தராநீள்கதலி
செந்நெல்சேர்வயற்சிறந்திடுநாடுகள்சேர்ந்தே
மின்னுநேமியன்மகிழ்வுடன்விதர்ப்பர்கோன்மகளாம்
அன்னமேயிவைகாண்டுவாயெனமொழியறைவான். (௧௫)

ஆனிறைந்தெழச்சொரிந்தநற்பாலுடனளாவித்
தேனிறைந்தபோற்றித்திக்குமதரமெய்த்திருவே
பூனிறைந்துவான்புயல்களுந்தவழுறப்பொருந்துங்
கானிறைந்துநீள்கருங்கடல்பொருவினகாணாய். (கசு)

அன்னமென்னடையடியினையரவிந்தமுகில்சேர்
மின்னெனுமிடைகவினுறவிளங்கியதிருவின்
முன்னவனமர்தொலைந்துதன்முடியிறக்கியபோற்
சென்னெறுன்னியகதிரினம்வளைந்திடுஞ்செயல்பார். (கஎ)

வேனுமிர்ந்தபூவாழுமார்கலியெழுவிடமுஞ்
சேலுநாணுநீலோற்பலஞ்சேர்விலோசனையே
கோலமாகியதாலங்கள்சனத்தையுட்கொண்ட
போலவேயுயர்வளையொளிர்பூவினம்பாராய். (கஅ)

மும்மதத்தெழுங்கரியினன்கோடெனமுளைத்து
விம்முகற்பயோதரங்கவினுறமிளிர்திருவே
வெம்மையுற்றவர்கருமம்போல்மதுகரம்விரியுஞ்
செம்மலற்சுவையருந்தியோவினசெயல்பாராய். (கக)

கொங்கைபங்கயமுகையெனக்குவிந்தொளிகொள்ளுந்
திங்கள்வேழ்கிடுந்திருமுகமுடையசெந்திருவே
தங்கமாகியதமனியத்தகடிழைமணிபோ
லெங்குமாதளைக்கனிவிரிந்தெழுவனபாராய். (உ0)

நத்திஞரங்கணிரையதாய்நற்பவளத்தின்
வைத்ததாமெனுந்தசனங்களிலங்கியமடந்தாய்
சுத்தசாத்திகசுருதிகளாவனபொருவ
மெத்தமாங்கனிகீர்கிளிவிரும்புதல்பாராய். (உக)

அலைகொள்வேலையினமருவானரக்கர்மேல்வளைக்குஞ்
சிலையிதாமெனப்பொலிந்தெழும்புருவநற்றிருவே
விலைகொள்மாதரார்செயலெனவிளங்கிடுமலர்கள்
பலவின்மீமதுநுகர்ந்துபோமறுபதம்பாராய். (உஉ)

சேகிலாதசாகரந்தனின்முகந்துசேணிறையு
மேகமாமெனவளர்ந்தவைம்பாலொளிர்மின்னே
மாகமாளுவானயனம்போற்றோகைகள்வயங்க
நாகமீதினின்மயூரங்கள்நடிப்பனபாராய். (உங)

சந்துநந்துமந்தாரமுந்தானமுந்தள்ளிக்
கந்தநன்மலரெறிந்துமந்தாகினிகடுப்ப
வந்துமுந்தியநதியினினெழுசுழிமானுன்
னுந்திகண்டிவில்லாதொளிந்தோடுவபாராய். (உச)

தேய்விலாமதியெனத்திகழானனத்திருவின்
றூயதாகியகழுத்தினிற்றோற்றனமெனவே
யோய்விலாதுகித்திலமுதிர்த்தோடியேயயத்தின்
மேயுங்கீள்வலம்புரியினம்வெருத்தனபாராய். (௨௫)

வள்ளையாந்திருக்காதினிற்றேடலைமானே
யொள்ளிதானநின்விழியெழிலொக்குமென்றுயர்ந்து
துள்ளியேசரிதூங்கலைமென்றுதான்வேழ்கித்
தெள்ளிதானசேலயந்தனில்மூழ்கிடுஞ்செயல்பார். (௨௬)

வாருலாவியேசுதைநிறைமணிக்கலசம்போ
லாரமல்கியபயோதரமழகியதிருநல்
லூருவாமெழிலொக்கிலமென்றுகாட்த்துயர்ந்த
காருலாவியகதலிகள்கவிழ்வனகாணாய். (௨௭)

வல்லாவலர்மொழிக்கிடமதியொன்றுமில்லாப்
புல்லியோர்வரமுன்புகலாதுபோற்பொலிவால்
அல்லிமாமலரிருந்துறையணமணைநின்வாய்ச்
சொல்லிணையக்கருங்குயிறூங்குவகாணாய். (௨௮)

அந்தமாகியகேகயமெங்கணுமாடக்
கந்தாண்மலர்க்கேசரங்காளங்கள்பாடச்
சந்துமாமதக்கோடரமொருவியதாவு
மந்திமாங்கனிசிதறுவமடக்கொடிபாராய். (௨௯)

இன்னதாயவற்புதங்களைபாதவர்பெருமான்
மின்னிருடனைக்கன்பினால்விளம்பியேவிளங்குங்
கன்னலோங்கியநாடுகள்பற்பலகடந்து
மன்னிருன்குடதிசையலைமலியும்வாரியினை. (௩௦)

சங்கநாணியகழுத்தினடாமரைமலர்மேல்
மங்கையாமவடனக்கொடுமண்மிசையிழிந்து
செங்குடகஞ்சேர்ந்தவனைவன்பர்திரண்டு
பொங்கியேயுயர்ந்தாலெனவெதிர்ந்ததுபுணரி. (௩௧)

ஊழிகாலங்களௌனதிடையுரகன்மேற்றுயின்று
வாழுமாதவனிலமிசையிழிந்துமாமலரி
னேழையோடும்வந்தானெனவிருகரமெடுத்தே
யாழித்தான்றொழுதாலெனவிசிரமசைந்த. (௩௨)

மூலையதாகியேமூவுலகினுக்குமெய்ம்மூர்த்தி
விளையவாயர்தம்மனைதொறுங்கடைதயிர்வெண்ணெ
யளையுமாயனூர்தேவியொடடைந்தனனகண்டு
வளைகளவீசியேவணங்குவபோல்வருவாரி. (௩௩)

இன்னதாகியகருங்கடற்கோடமர்ந்திலங்கும்
புன்னைகண்டலினிழலிடைநுளைச்சியர்பொருனர்
தன்னைநாடிமுன்னவர்தருங்கலவிதன்மனத்தி
லுன்னிநூர்முலையணிகலனுருகிநீராக. (கூரு)

கரந்தைகைதைபுன்னாகந்தன்னிழலிடையிருந்து
வருந்தியெங்கணுநுளைச்சியர்கூடலைவளைத்தே
யரந்தையெய்திநீள்கடலினைகம்பியிற்கொழுநர்
பிரிந்திருந்தினமெண்ணியங்கழுதுபெய்துற்றார். (கூகு)

கடலைப்பார்த்துயர்கணவனைக்காண்கிலர்காம
னடரக்காத்திடவகைசிறிதறிகிலாதயர்வார்
படிவைப்பார்த்திழைகூடலைப்பார்த்தபாவையர்க
ளிடைாப்பார்த்தவர்கொழுநரெய்திடவெதிர்ந்தணைத்தார்.

இன்னதாகியநுளச்சியரிலங்குகிந்துவினை
யன்னமேயிவைகாணெனக்காட்டினனதனுட்
பொன்னுஞ்சிலார்மதிலுயர்துவரையின்பொலிவை
மின்னிநுமொளிர்ங்கண்டனன்விபுதர்கள்பெருமான். (கூஎ)

உருளையொன்றுறுந்தேரினன்சசியமனைறுங்கும்
பிரளையந்தனினடுவுயர்பெருவரைசிவணத்
திரளயங்கொளாதியற்றுவராபதிசிறப்பத்
தரளநன்மணிக்கோபுரமெழுந்தவான்றடவி. (கூஅ)

அலைந்தனூர்தியாம்பிரமனோடமரர்கள்பணியும்
மலைத்தன்மாதவனரவிந்தமலர்மகளுடனே
யனைத்தநீர்த்துவந்தமர்ந்திடவாழியின்விளங்கும்
மனைத்தனிமமணிமகுடமொத்தமர்ந்தகோபுரமே. (கூகூ)

தழைத்தெழுந்துயரிந்துவைத்தன்முகவெழிலாற்
பழித்தமிற்னுடன்பரமனூர்வரப்பசும்பொன்னு
விழைத்தான்மணித்தாளமோடிலங்குகோபுரங்கள்
விழித்துவெண்ணகைசெய்வனபோலவில்வீச. (சo)

தருணமுண்டசமலரின்மேனிறைந்தெழுந்தையல்
கருணையங்கடலெனவளரரியுடன்கலந்தே
யருணனுந்துதேரெனவருமிரதத்தினமர
வருணர்கையெடுத்தாடியதொத்தவான்கொடிகள். (சக)

மின்னனுளரிதன்னுடன்மேவினளெனவே
பன்னகாதிபனுடலினைவளைந்துதன்படம்வான்
மினவோங்கியேவீரையின்விளங்கியவேலும்
பொன்னின்மாமதிற்கோபுரம்புகலுமாறெளிதோ. (சஉ)

விண்டலங்கலந்தெயிலுறமின்னுகோபுரங்கள்
மண்டபங்கள்சாமீகரம்வயங்குமாளிகைகள்
கொண்டல்மண்டியபொழில்நிறைக்கொற்றமானகரை
யண்டருந்துதிசெய்துதாம்விரும்பியேயடைவார். (சஙூ)

முனிவர்வாசவன்முண்டகமலருறைமுதல்வ
னினியனுபரியிருந்தருள்பதியிதாமென்று
நினைவரோதியேநித்தமுமடைகுவரொன்றுற்
றுனியிலாநலத்துவரையினெழில்சொலற்கரிதே. (சச)

இன்னதாகியவேம்பலிற்றிலங்கியநகரைக்
கன்னருனெனுமொழியுடைக்கமலனுயகியா
மின்னனுப்துவராபதியிதுவெனவிளம்பி
மன்னினுன்திருவீதியின்மாதவர்பெருமான். (சரு)

ஏசிலாதுயர்விதர்ப்பர்கோனருளுயிர்நிரையாங்
காசுலாவியமுலையினுடன்கருமுகிலாம்
வாசுதேவன்மாலிரதமேல்வந்தனன்காணு
மாசையாலெழுந்தனுகினரணிநகருள்ளோர். (சசு)

அந்தணாளர்களருந்தவமுனிவர்களரசர்
மைந்தர்வள்ளியோர்மதகரிதேர்கொடிவளைய
கந்தமாமலரளகவாணுதலியர்கடிதின்
வந்துமாதிருவெழிலினைக்கண்டனர்மகிழ்ந்தார். (சஎ)

ஆடினர்கள்மாமுனிவர்சளாகிகள்பகர்ந்தே
பாடினருருகுழையுறுமியாழ்த்தெரிவையர்பலரு
மூடினர்மறையறைபவர்முடுகியசகட்டைச்
சாடினுனுயர்தேரின்மேற்றிருவொடுஞ்சார. (சஅ)

விடவராவணைத்துயில்கொள்வான்விதர்ப்பர்கோன்மகளோ
டடையவாசுகியமுந்துறப்பிணித்தமந்தரத்தாற்
கடையவாரியினமிழ்தெனக்கண்டவானவர்போ
லுடலெலாங்களித்தேயெழுந்தாடினருவப்பால். (சகூ)

நீலமாமணிவித்துருமத்துடனிறைந்த
கோலமாமெனவிதர்ப்பர்கோன்குமரியோடிலங்கி
மாலினுரிரதத்தின்மேலருங்கவின்வகுக்க
நூலெலாந்தரும்பிரமனுற்கரிதெனநுவல்வார். (ருo)

சித்தசன்விளையுறும்வடிவுடையசிதரனுக்
கொத்தசுந்தரியுருப்பிணியுவமைவேறில்லா
ளித்தலந்தனிலெய்திடயாமுனமிழைத்த
மெய்த்தவங்கடானேதெனமகிழ்ந்துளைவிரித்தார். (ருக)

உருவினுயர்கமலமீதமர்ந்தவொண்கொடியாந்
திருவினள்மகளாகவுந்தேவகிகுமரன்
மருகனாகவுஞ்சிறந்திடுமன்னர்கோன்விதர்ப்பன்
பெருகுமாதவமளவிலாதென்றனர்பெரியோர். (௫௨)

தவத்துளோர்விழைவுறமழைதடுத்துமால்வரையைக்
கவித்தகையர்பாற்றூதினைவிடுத்தறன்கடந்த
வவித்தசேதிபனமரிடையழிந்திடமகிழுஞ்
சிவத்தவாயினள்சமத்தியென்றுரைத்தனர்செகத்தோர். (௫௩)

கனகமாமதிலிலங்கையான்கோன்சிரங்களைந்தே
சனகமாமகளுடன்றிருவயோத்தியிற்சாருந்
தினகரன்குலத்துதித்தவன்றிறலெனத்திருவோ
டனகனேய்தினன்றுவரைமானகரிலென்றுரைப்பார். (௫௪)

வேழமாகியகுவலயாபீடத்தைவீழ்த்துச்
சூழுமாரதர்விழக்கஞ்சனுடலினைத்துகைத்த
வாழியாயமிழ்தெய்தியவணங்கினோடமர்ந்தே
வாழிவாழியென்றுரைத்தெழுந்தாடினர்மறையோர். (௫௫)

ஆயுமாமலர்பொழிற்றழுதாசனராடப்
பாயுமாவிரதத்தனிலிழிந்துபார்நண்ணித்
தூயமாதவர்சுருதிகள்மொழிந்திடத்துலங்குங்
கோயில்மேவினன்குடமெடுத்தாடியகோமான். (௫௬)

எழுந்தமைம்முகிலாமெனவெய்தியேதருவின்
கொழுந்துபோன்றமின்னுடன்வசுதேவனைக்குறுகித்
தழைந்தவன்பினால்வணங்கலுந்தனையனைத்தழுவி
வழிந்தகண்ணினீர்மஞ்சனமாட்டினன்மகிழ்வால். (௫௭)

தந்தைதன்றிருவடியினிலிறைஞ்சிச்சக்கரத்தோன்
விந்தைதன்னுடன்றேவகியடிமிசைவீழச்
சிந்தையிற்களிப்பெய்திடச்செம்மலைத்திருவை
வந்துமாமலர்க்கையினால்மார்புறவணைத்தாள். (௫௮)

அணைத்துமோந்தனளச்சுதனுச்சியையமிழ்தி
னினைத்தபாவையைமகிழ்வினால்ருகனால்நோக்கிப்
பணைத்தவார்வமோடுறவணைத்தான்படிவிசும்பின்
குணத்தினுயர்மருகியாமென்றுளங்குளிர்ந்தே. (௫௯)

கொற்றமிஞ்சியபுனிதனிந்திரையுடன்கூடிச்
சுற்றமின்புறரோகணியடிமிசைத்தொழலும்
பற்றிமைந்தனைத்தழீயினன்பங்கயமலரி
னுற்றமின்னினையணைத்தனள்பெருங்களிப்புறவே. (௬௦)

இன்னதாகியமகிழ்வுறநங்கையோடிலங்கும்
மன்னைமார்களுருழையுறுமரவிந்தமலரின்
மின்னோடேகிமால்மண்டபமதனில்வீற்றிருந்தான்
மன்னர்மாதவர்மறையவர்மகிழ்ந்தினிதிருப்பார். (௯௧)

அரசனுக்கிரசேனனக்குரூரன்மெய்யதனால்
வரிசைமிக்குயருத்தவன்மந்திரத்தலைவர்
கிளைகொள்சிந்துவிற்றிகழுமாண்டரியுடன்றிருவைக்
களைசெயற்கரியதாயதோர்களியுறக்கண்டார். (௯௨)

அகில்மாதரார்கருப்புரத்தீபங்களேந்த
வீசினார்மலரெங்கணும்விண்ணவர்மகிழ்வோ
டாசிகூறினாரந்தணரந்தவேலையின்வாய்
வாசுதேவனைத்தரும்வசுதேவனுமறைவான். (௯௩)

மாதவத்துயர்விதர்ப்பர்கோனருடிருமகளும்
யாதவக்குலக்குமரனுமெழில்மணமிசையத்
தீதகற்றிமுகூர்த்தம்சிவினாவினிற்செப்பென்
றோதிடக்கற்கவுயர்தவமுனிவனங்குரைப்பான். (௯௪)

காளையாகியகருமுகிலனையகண்ணற்கு
வாழிமின்விழிவனசமாமலர்தனின்வனிதை
கோளெலாஞ்சுபமாகவேகூடிவந்நன்னாள்
நாளையாமெனவுரைத்தனனவையறுதவத்தோன். (௯௫)

சுத்தவொண்மறைகற்கமாமுனியிவைசொல்லச்
சித்தமார்வமுற்றிலங்கியதேவகிதனைவ
னத்திருபுரத்தருமற்றுமவன்கிளையோர்க்கு
மெத்துமாமணவோலைகொடுதனைவிடுத்தான். (௯௬)

மைந்தனானசித்ரனுக்கும்விதர்ப்பர்கோன்மகட்கும்
மந்தமாமணக்கோலமும்நாளையேயதனால்
முந்தியேகுமினென்றுதான்மொழிந்துதூதுவரை
நந்தகோபற்குமசோதைக்குநலமுறவிடுத்தான். (௯௭)

மற்றுமேபலவளாகத்துமன்னவர்தமக்குஞ்
சுற்றமாகியகிளைஞர்க்குந்தூயவேதியர்க்குங்
கொற்றமாதவன்கோகனகத்தவள்கரத்தைப்
பற்றுநாளையென்றோலைகள்விடுத்தனன்பரிவால். (௯௮)

சீதமாமெனுமொழியொளிர்கெண்டையங்கண்ணித்
தீதிலாதசெம்மலர்த்திருச்சித்திரன்றனக்கு
நீதியாமணங்கூடிடவேவரவென்றே
வேதமோதியவியாசற்காள்விடுத்திடும்வேலை. (௯௯)

வேறு. அரி[illegible]றையினைப்பிரிந்தவனியினிணையில்
நிருபராகியேநிகரிலாவுருப்பிணிதன்னை
மருவினானெனுமொழியினைவயங்கும்பாற்கடலிற்
திருவினுக்குரைசெய்வபோற்றினகரன்மறைந்தான். (எ௦)

அருக்கனற்குடவார்கலியழுந்திடவரசர்
நெருக்கமைக்கணின்மடந்தையர்மருங்கெலாம்நிறையச்
செருக்குமுக்கிரசேனனுஞ்சேனையுஞ்சூழப்
பொருக்கெனக்கரிவேரினின்மேற்பொன்மனைபுகுந்தான். (எக)

அந்தியாதனுமுனிவர்களரசர்வேதியர்கள்
சந்தியாவையுமுடித்துழீஇத்தழைத்தெழுமியாமம்
வந்துமுந்தியேவளர்ந்தனவானமீன்மல்க
விந்துவாரியினிலவொளிபரந்திடவெழுந்தான். (எஉ)

திங்கள்கங்குலிற்சிறந்திடத்திமிரமோவிடமால்
பொங்கும்வெங்கணைச்சம்பரசூதனன்பொழிய
வங்கதச்சுடர்மணியொளிரங்கதப்புயமா
றங்கநற்றிருவிவரலால்மற்றவர்துயின்றார். (எங)

குண்டினபுரிமன்னருள்கோமளவல்லி
யண்டர்நாயகனுடன்றுவராபதியடைந்தும்
புண்டரீகநன்முகையெனும்பூண்முலையழுந்த
மண்டியேயணையாதமல்வளரவேயுரைப்பான். (எச)

வேறு. மதனேகொடியாய்மலர்வாளியினா
லிதனேசுடுநீயெனவேபொழிவாய்
சுதைபோலெழுமாமதிதன்சுடரோ
விதமாயழல்வாய்வினையேனுடல்மேல். (எரு)

இருளோதுவிசாயகலோவெதிரா
மருளோவொளியாமனமேமறவா
பொருளார்மறையேபுகல்வாயமிழ்த
மருளார்துவராபதியேயடைவார். (எசு)

விழியோதுயிலாவிடியாதிரவு
மொழியாகடலாரொலியொண்மதனார்
பழியேமுயல்வார்கணையேபரவு
மழையோமுகில்போல்வருவார்மருவார். (எஎ)

உகமாயிரகோடியின்மேலுறவே
பகைபோலிருளேவளையாய்பகராய்
செகம்வானுகர்வார்திருமாலுருகின்
னகமேபுகல்நீயகல்கின்றிலையோ. (எஅ)

முனைநீள்மயலாரழலாய்வளையத்
தனியேயுழல்வேனுயிர்தானனையா
யெனநாயகனார்வரவேயினிநீ
கனைவாருதிமேலெழுவாய்கதிரே.
வினையாமிருளேவெடியாயெனவே
யனமானடையாளமிழ்ந்தேயனையா
ளினையாவுருகாநெடியோனெனவே
மனமோமயலாலயர்வேலையின்வாய். (அ௦)
உருவாயருவாயொளியாயெழுமா
லரிகாரணனாரமுதேயனையா
டிரிவோடனையாள்மயல்சேர்செயலால்
மருவார்மலர்மேல்லணைமேல்மருவார். (அக)
மலர்வாளியினைம்மதனேபொழிவா
னலையோகடலோவமராதொலியுங்
கலையோமதியோகனலேதருமால்
சிலைநேர்நுதலாளணைசேர்கிலளால். (அஉ)
படிவானிறையப்படர்வாய்திமிரக்
கொடியாய்விடிவாய்கொடியாகியவேல்
விடைமேகலையேல்விடவெண்டரள
வடமேபுனைமாமுலையாள்வரவே: (அங)
புயலோகுழலாள்பொலிவாணுதலாள்
குயிலோமொழியாள்கொடியாமிடையா
ளயிலோவிழியாடனையானனுகக்
கயலார்கடல்மேல்வருவாய்கதிரோ. (அச)
குவிமாமுலையாய்மொழிகோகிலமே
துவர்வாயனமேதுடியாமிடையாய்
புவினேரமிழ்தேபுணராயெனவே
யிவையேமொழிவானயருணெழவே. (அரு)
கடலேழுடனீள்கனகக்கிரிசேர்
படிவான்முதலாயபராபரனுந்
துடிநேரிடையாகியதூய்மொழியு
மிடராமயலெய்திடுமெல்லையின்வாய். (அசு)
வேறு. மலையினையேந்தியவாசுதேவனார்
சிலையுறுநுதலியைச்சேர்வதின்றென
அலையுறுகடலெனப்பேரியார்த்திடப்
நலனுறவெழுந்தனர்நகருள்ளாரரோ. (அஎ)
(துவாரகாவதிப்படலமுற்றிற்று. ஆ-படலம் எஅ-க்கு திருவிருத்தம் [illegible].)

முதற்புத்தகம் முடிந்தது.